# வாரம் ஒரு பாசுரம்

சுஜாதா


**விசா பப்ளிகேஷன்ஸ்**

"சுகான்ஸ் அப்பார்ட்மெண்ட்ஸ்

பழைய எண் : 28 புது எண்.13, சிவப்பிரகாசம் சாலை,

தி.நகர், சென்னை–600 017.

தொலைபேசி : 2434 2899, 24327696

Cell No.: 9952973378 / 9444384743

முதற் பதிப்பு : அக்டோபர், 2007
இரண்டாம் பதிப்பு : செப்டம்பர், 2009
மூன்றாம் பதிப்பு : பிப்ரவரி, 2014
நான்காம் பதிப்பு : டிசம்பர், 2020



**VAARAM ORU PAASURAM**

By : **Sujatha**

Fourth Edition : December, 2020
No.of Pages : 88
Paper Used : 18.6 kg. N.S. Book Print

**விலை : ரூ.65/-**

**VISA PUBLICATIONS**
Sucons Appartments, First Floor,
No.13, Sivaprakasam Street,
T.Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 24342899, 24327696
Email : enquiry@thirumagalnilayam.com
website : www.thirumagalnilayam.com

Available at :
**THIRUMAGAL NILAYAM**
Sucons AppartmentsFirst Floor,
No.13, Sivaprakasam Street,
T.Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 24342899, 24327696
Cell No.: 9952973378 / 9444384743

Laser Typeset By : Sivaa Graphics, Chennai - 94. Ph.8939475707
**Printed at : Novena Offset Printing Co., Chennai - 5 ☎ 28446891**

# முன்னுரை

ஆழ்வார்கள் பன்னிரண்டு பேர். அவர்கள் பெயர்கள் இவை- பொய்கையாழ்வார், பூதத் தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகர ஆழ்வார், திருப்பாணாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், நம்மாழ்வார். இவர்களுடன் மதுரகவிகளைச் சேர்த்தால் பன்னிரண்டு பேர் என்று கணக்கு. இவர்கள் பாடல்களை தமிழின் மிகச் சிறந்த பக்தி இலக்கியங்களில் ஒன்றான நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் என்னும் நூலாகத் தொகுத்தவர் நாத முனிகள்.

ஆழ்வார் பாசுரங்களுக்கு அறிமுகமாக 'வாரம் ஒரு பாசுரம்' என்ற தொடரை ஓராண்டு காலமாக 'அம்பலம்' இணைய இதழிலும் 'கல்கி' வார இதழிலும் எழுதி வந்தேன். எளிய சில பாசுரங்களை இஷ்டப்படி தேர்ந்தெடுத்து ஒரு பக்கத்தில் அதற்கு விளக்கம் தந்தேன். அந்தப் பாசுரங்களில் இன்று வழக்கில் இல்லாத சில அரிய சொற்களையும் சுட்டிக் காட்டினேன். இந்தத் தொடருக்கு வாசகர் களிடையே நல்ல வரவேற்பு கிடைத்தது. இதை விசா பதிப்பகத்தினர் உடனே புத்தகமாக வெளியிடவும் விரும்பினர். அவர்கள் இதற்கு முன் பதிப்பித்திருந்த 'ஆழ்வார்கள் ஓர் எளிய அறிமுகம்' என்னும் நூலுக்கு துணை நூலாக இது இருக்கும் என்று தோன்றுகிறது.

நண்பர்கள் 'வாரம் ஒரு பாசுரம்' என்பதை ஏன் ஒரு ஐம்பத்திரண்டோடு நிறுத்திக் கொண்டீர்கள்?

நாலாயிரத்துக்கும் தொடர்ந்து கொடுத்திருக்க லாமே' என்று கேட்டனர்.

இந்த நூலின் குறிக்கோள் அதுவல்ல. திவ்யப் பிரபந்தம் முழுவதற்கும் ஒவ்வொன்றாக அர்த்தம் சொல்வதில் ஓரளவுக்கு ஆயாசம் ஏற்பட்டு விடும். மாறாக சில பாசுரங்களை அடையாளம் காட்டும் போது மற்ற பாடல்களைத் தேட ஆர்வம் ஏற்படும். அதுதான் இந்த நூலின் குறிக்கோள். நான் கோடி காட்டியதை நீங்கள் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். அந்த அற்புதமான தேடலில் உங்களுக்குப் பல இரத்தினங்கள் கிடைக்கும்.

இந்நூலை சிறப்பாக வெளியிடும் விசா பதிப் பகத்தினருக்கும் முதலில் வெளியிட்ட அம்பலம், கல்கி இதழ்களின் ஆசிரியர்களுக்கும் நன்றி.

-சுஜாதா



# 1. விளக்கேற்றித் துவங்குவோம்

எந்த நல்ல காரியத்தையும் விளக்கேற்றித்தான் துவக்கி வைக்கிறோம். இன்றைய தினங்களில் கம்ப்யூட்டர் விழாக்கள் கூட குத்து விளக்கேற்றித்தான் துவங்குகின்றன.

குத்துவிளக்கைத் தேடி அலைய முடியாது. நமக்கு ஓர் அகல் விளக்குப் போதும்.

'தகளி' என்ற அருமையான கடைச் சங்க காலத் தமிழ் வார்த்தையை நாம் மலையாளத்துக்கு இழந்துவிட்டோம். மண் விளக்குக்கு பயன்பட்டு வந்த சொல். கார்த்திகை மாதத்தில் வீடெங்கும் வரிசையாக ஏற்றி வைப்பார்களே அந்த விளக்கு. அம்மாதிரி விளக்கொன்றை ஏற்றிவைத்து இந்தத் தொடரைத் துவங்குவோம்.

விளக்கேற்றுவது இருள் நீங்குவதற்கு. இடர்ப்பாடுகள், சுனாமி ஆழிப்பேரலைப் போல வந்தாலும் அதை நீக்க ஒரு பெரிய விளக்கை ஏற்றி வைத்தால் போதும். அதற்குத் தேவையான சமாசாரங்கள் என்ன என்ன? முதலில் ஒரு தகளி வேண்டும். அதற்கு உலகத்தையே (வையம்) எடுத்துக் கொள்ளலாம். அதில் எண்ணெய் ஊற்ற வேண்டும்; அதற்கு (வார்கடல்) சமுத்திரத்தைப் பயன்படுத்தலாம். திரி ஏற்ற வேண்டும்; கதிரவனைப் பற்ற வைக்கலாம். அதை கடவுளின் பாதத்தில் வைத்தால் போதும் காரியம் முடிந்தது.

இவ்வளவு பெரிய விளக்கை ஏற்றுவது கொஞ்சம் கஷ்டம் தான் என்றாலும் கற்பனை செய்தாவது பார்க்கலாமே. அட சொல்லி யாவது பார்க்கலாமே! காசா? பணமா? அந்தச் சொல் மாலை யாலேயே இடர்ப்பாடுகள் அனைத்தும் நீங்கிவிடும் என்கிறார் பொய்கையாழ்வார்.

*வையம் தகளியா வார்கடலே நெய்யாக*
*வெய்ய கதிரோன் விளக்காக- செய்ய*
*சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொல்மாலை*
*இடராழி நீங்குகவே என்று.*

*(வெய்ய- வெப்பமிக்க, செய்ய-சிவந்த, சுடராழி-ஒளிச் சக்கரம், இடராழி- துன்பக்கடல்)*

இதைப் பாடிய பொய்கையாழ்வார் ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். திருவெஃகா என்ற பழைய பெயர் கொண்ட காஞ்சிபுரத்துக்காரர்-துறவி.

இந்தப் பாடல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் 2082ஆம் பாசுரம். இயற்பா என்கிற பகுதியில் முதல் திருவந்தாதியில் முதல் பாசுரம்.

இது நேரிசை வெண்பாவில் அமைந்தது. பொய்கையாழ்வார் பாடிய நூறு பாடல்களால் புறவிருள் அகன்றது என்பது வைணவர்கள் நம்பிக்கை. அதிகாலையில் கடற் கரையில் இருள் பிரியும் வேளையில் நின்றுகொண்டு தொடு வானத்தில் சூரியன் உதிக்க எழுந்து உலகெலாம் வெளிச்சத்தில் நனைவதைப் பார்க்கும்போது 'சஹஸ்ரகோடி பாஸ்கர துல்யம்' என்று சொல்லும் 'கதிராயிரம் இரவி கலந்தாற்' போன்ற அந்தக் கணத்தில் பொய்கையாழ்வாரை நினைவில் கொள்ளுங்கள்.



## 2. பெரிய விளக்கு

**பொ**ய்கையாழ்வார் ஏற்றியது மிகப் பெரிய விளக்கு. அந்த அளவுக்கு விளக்கேற்றமுடியாத பூதத்தாழ்வார் என்னால் முடிந்த விளக்கை ஏற்றிப் பார்க்கிறேன் என்கிறார்.

*அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக*
*இன்புருகு சிந்தை இடுதிரியா-நன்புகழ்சேர்*
*ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு*
*ஞானத் தமிழ் புரிந்த நான்.*

(தகளி-மண்விளக்கு, நன்புகழ்சேர்-குறையற்ற புகழ் கொண்ட, நாரணன்-நாராயணன், விஷ்ணு )

அன்பை ஓர் அகல் விளக்காக்கி அதில் ஆர்வத்தை நெய்யாக ஊற்றி சிந்தனையைத் திரியாகப் பற்றவைத்தால் ஏற்படும் ஞானம் அல்லது தரிசனம் அல்லது காட்சி எப்படி இருக்கும் என்று யோசித்துப் பாருங்கள்.

உலகில் உள்ள அத்தனை சிந்தனாபூர்வமான விஷயங்களுக்கும் இம்மாதிரியான விளக்கு ஒன்று தேவைப்படும். எந்த விஷயத்தை யுமே அறிய முயற்சிக்குமுன் அதை நாம் நேசிக்க வேண்டும். அதன்மேல் அன்பு செலுத்த வேண்டும். அதோடு அதில் ஆர்வம் வேண்டும். ஆர்வம் என்றால் enthusiasm ஈடுபாடு, பிடிவாதமான தேடல் இவற்றுடன் சிந்தனா சக்தியும் சேரவேண்டும். அப்படிச் சேர்ந்து விட்டால் நாராயணன் கொடுப்பது ஞானம், அறிவு, காட்சி வெளிப்பாடு revelation.

எந்த தரிசனத்துக்கும் இரண்டு வகை விளக்கையும் ஏற்ற வேண்டும். தத்துவம், ஞானம் என்ற இரண்டு வகை விளக்கு. பொய்கையாழ்வார் ஏற்றியது தத்துவ விளக்கு. உலகளாவிய தத்துவம். பூதத்தாழ்வார் ஏற்றியது ஞானவிளக்கு.

இவ்விரண்டு விளக்குகளையும் ஏற்றும்போது தெரியும் காட்சி என்ன? அதை அடுத்த பாசுரத்தில் பேயாழ்வார் சொல்லக் கேட்போம்.

பூதத்தாழ்வாரின் இந்தப் பாடல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் 2182ஆம் பாடல். இரண்டாம் திருவந்தாதியின் முதல் பாசுரம். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் மூவரையும் முதலாழ்வார்கள் என்று சொல்கிறார்கள். இது என்ன பெயர்கள் பேய், பூதம் என்று. இம்மூவரையும் பற்றி சரித்திரக் குறிப்புகள் எதும் இல்லை. மூன்றுமே கற்பனைப் பெயர்களாக இருக்கலாம். பொய்கையாழ்வார் ஒரு தாமரைப் பொய்கையில் அவதரித்தார் என்று ஒரு கதை உண்டு. பேயாழ்வார் கோயில் சென்னை மயிலாப்பூரில் உள்ளது. மூவரும் சமகாலத்தவர்கள். சந்நியாசிகளா? ரிஷிகளா? ஏதும் தெரியவில்லை.

அவர்கள் எழுதிய முந்நூறு அற்புதமான பாசுரங்களின் மூலம்தான் அவர்களை அறிய முடிகிறது.



## 3. வெளிச்சத்தில் தெரியும் காட்சி

**பொ**ய்கையாழ்வார், பூதத்தாழ்வார் இருவரும் இரண்டு வகை விளக்குகளை ஏற்றி வைத்தனர். ஒன்று, உலகத்தையே தகளியாகக் கொண்டு கடலை அதில் வார்த்து சூரியனைப் பற்ற வைத்தது; மற்றொன்று அன்பை அகல்விளக்காக்கி ஆர்வத்தை நெய்யாக ஊற்றி சிந்தனையை திரியாக்கி ஏற்றி வைத்த ஞானவிளக்கு.

இவற்றினால் கிடைக்கும் வெளிச்சத்தில் தெரியும் காட்சி என்ன என்பதை பேயாழ்வார் அற்புதமாக சொல்லியிருக்கிறார்.

***திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்***
***அருக்கன் அணி நிறமும் கண்டேன்-செருக்கிளரும்***
***பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்***
***என்னாழி வண்ணன்பால் இன்று.***

*(அருக்கன்-சூரியன், செருக்கிளரும்-போரில் கலக்கும், ஆழி-சக்கரம், கடல்)*

நான் தரிசித்தது என்ன?

திரு என்னும் மகாலக்ஷ்மியை பார்த்தேன். பொன் போன்ற உடலைப் பார்த்தேன். சூரிய பிரகாசம் கொண்ட ஆபரணங் களைப் பார்த்தேன். பகைவரைக் கொல்லும் சக்கராயுதத்தையும் சங்கையும் பார்த்தேன். கடல் வண்ணன் நாராயணனைப் பார்த்தேன் என்கிறார்.

சட்டென்று மின்னல் வெளிச்சம்போல் இவையனைத்தும் ஒரே சமயத்தில் இலக்குமி சமேதராக விஷ்ணு, ஆழ்வாருக்கு தரிசனம் தந்திருக்கிறார்.

அதன் பரவசத்தை ஆழ்வார் நமக்கு சொல்லியிருக்கிறார். மகாவிஷ்ணு எப்படி இருப்பார் என்று சின்ன வயசில் கேட்டிருப் பீர்கள். கையில் சங்கு சக்கரத்துடன் நீல நிறமாக பக்கத்தில் அல்லது

மார்பில் லட்சுமியுடன் இருப்பார் என்று உங்கள் தாய் சொல்லியிருப்பார்.

மானிடர்களுக்கு மகாவிஷ்ணுவின் தோற்றம் பற்றி ஆழ்வார்கள் பலரும் பலவிதமாகப் பாடியிருக்கிறார்கள். பேயாழ்வாரின் இந்த தரிசனம், அவற்றின் எளிமையான ஒரு வருணனை, அடுத்த முறை அகல் விளக்கேற்றி வைக்கும் போது இந்த பாசுரத்தை நினைவு கொள்ளுங்கள், மகாவிஷ்ணு தெரியலாம்.



# 4. சோர்வு

**'சோ**ர்வு' என்ற வார்த்தை தமிழில் இன்று ஆயாசம், அலுப்பு என்ற பொருள்களில் பயன்படுகிறது. ஆழ்வார்கள் காலத்தில் சோர்வு என்றால் மறதி என்று பொருள் இருந்தது. நாம் பல காரியங்கள் செய்ய மறந்து போய்விடுகிறோம் அல்லது செய்துவிட்டு மறக்கிறோம். வேலைக்காரர்களின் சுலபமான சால்ஜாப்பு 'மறந்துட்டேங்க' என்பது. கணவர்கள், மனைவிகள் கூட சௌகரியமான சமயங்களில் மறந்துவிடுவார்கள். நவீன வாழ்க்கையில் இதை செலக்டிவ் மெமொரி என்பார்கள். சில விஷயங்கள் மட்டும் ஞாபகம் இருக்கும்.

சாகும் தருவாயில் வரும் மறதி நிஜ மறதி. நம் மூளையின் ந்யூரான்கள் நினைத்து நினைத்து களைத்துப் போகின்றன. அந்த கட்டத்தில் இடுப்பு வேஷ்டிக்கூட மறந்து போய் விடுகிறது. அப்போது போய் 'சொத்து ஏதாவது சேர்த்து வைத்திருக்கிறாயா? அதை எங்கே வைத்திருக்கிறாய்? சொல்லு சொல்லு' என்று சுற்றிலும் உள்ளவர்கள் தொந்தரவு செய்வார்கள். ஏறக்குறைய கோமா ஸ்டேஜில் இருப்பவரிடம் யார் கேட்டாலும் பதில் வராது. அந்தக் காட்சியை பெரியாழ்வார் ஒரு திரைப்படம்போல காட்சிப் படுத்துகிறார்.

*சோர்வினால் பொருள்வைத்தது உண்டாகில்*
*சொல்லுசொல்லென்று சுற்றுமிருந்து*
*ஆர்வினாவிலும் வாய் திறவாதே*
*அந்தகாலம் அடைவதன் முன்னம்*
*மார்வம் என்பதோர் கோவில் அமைத்து*
*மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி*
*ஆர்வம் என்பதோர் பூ விடவல்லார்*
*அரவதண்டத்தில் உய்யலுமாமே.*

(சோர்வு-மறதி, ஆர்வினாவிலும்-யார் கேட்டாலும், அந்த காலம்-கடைசிக்காலம், மார்வம்-நெஞ்சம், அரவ தண்டம்-நரகத்தில் தண்டனை, உய்யல்-பிழைத்துப்போதல், தப்பித்தல்.)

பூதத்தாழ்வார் ஆர்வத்தை அகல் விளக்குக்கு நெய்யாக ஊற்றினார். பெரியாழ்வார் ஆர்வத்தை பூவாகத் தூவுகிறார். நெஞ்சை ஒரு கோயிலாக்கி அதில் மாதவனை (விஷ்ணுவை) தெய்வமாக நட்டு ஆர்வத்தை பூவாகப் போட்டால் போதும், எமதூதர்கள் விலகிச் செல்வார்கள் என உத்தரவாதம் அளிக்கிறார்.

'டாக்டர் நரேந்திரனின் வினோத வழக்கு' என்ற என் மேடை நாடகத்தை நீங்கள் பார்த்திருக்கலாம். அது பல முறை பூர்ணம் விசுவநாதன் அவர்களால் நடிக்கப்பட்டது. தொலைக்காட்சித் தொடராகவும் வந்தது. அதில் ஒருவர் கோமாவில் படுத்திருப்பார். உறவினர்கள் டாக்டரிடம், 'அவரை எப்படியாவது எழுப்பிடுங்க. சாவியை எங்க வெச்சுத் தொலைச்சிருக்கார்னு தெரிஞ்சா போதும் டாக்டர்' என்று கெஞ்சுவார்கள். அந்தக் காட்சிக்கு பெரி யாழ்வார்தான் எனக்கு உத்வேகம்.



# 5. தன்னுள்ளே பிறந்து எழுந்து அடங்கும்

கடல் அலைகளைப் பார்த்துக் கொண்டிருப்பது எவருக்கும் அலுக்காது. இத்தனைக்கும் ஓர் அலைக்கும் அடுத்த அலைக்கும் வித்தியாசமே இல்லாவிட்டாலும் ஒவ்வொன்றும் புதிதாய்ப் பிறப்பது போல் தோன்றும். முயன்று முயன்று தோற்றுப்போய் பின்வாங்கும். சின்னதாகி மறைந்து போவதற்குள் அடுத்த அலை ஆரவாரமாகப் புறப்படும். 'இந்த முறை பார் நிச்சயம் வெற்றி பெற்று விடுவேன்' என்றுதான் புறப்படும். நம் காலை வந்து தொடுவதற்குள் செல்லும். அலை வரும். அலையின் வேகத்தைக் குறைத்து இலக்கை எட்டவிடாமல் செய்துவிடும். இந்த நாடகம் இரவு பகலாக வருஷம் முழுவதும் சளைக்காமல் நடக்கும்.

கடலிலிருந்து கிடைக்கும் செய்தி என்ன? முயற்சி செய்து கொண்டே இருந்தால் வெற்றி கிடைக்கும் என்பதா? கடமையைச் செய், பலனை எதிர்பார்க்காதே என்பதா? இல்லையே. கடலின் வெற்றி அழிவைத் தருவதல்லவா! சுனாமி போன்ற ஆழிப் பேரலையா கடலின் வெற்றி.

திருமழிசை ஆழ்வார் தொண்டை நாட்டைச் சேர்ந்த திருமழிசையில் பிறந்தவர். நிச்சயம் கடற்கரைக்குச் சென்று கடலலைகளை கவனித்திருப்பார். அலைகளின் பிறப்பு, முயற்சி, எழுச்சி, வீழ்ச்சி இவற்றை கவனித்திருப்பார். அவருக்கு அவை யெல்லாமே பரம்பொருளின் செயல்களாகத் தெரிகின்றன.

தனக்குத்தானே அலையெழுகிறது. அதுபோல் உனக்குள்ளேயே நாங்கள் அனைவரும் பிறந்து சிறந்து உனக்குள்ளேயே அடங்கிப் போகிறோம். எல்லாமே உனக்குள்ளேதான். பிறப்பு, எழுச்சி, அடக்கம் எல்லாமே அவனிடமிருந்து அவனுள்தான் என்னும் போது நம் ஆணவங்கள் எல்லாம் அர்த்தமற்றுப் போகும்.

இனி ஆழ்வாரின் கடலோரக் கவிதையைப் பார்ப்போம்.

*தன்னுளே திரைத்தெழும் தரங்கவெண் தடங்கடல்*
*தன்னுளே திரைத்தெழுந்து அடங்குகின்ற தன்மைபோல்*
*நின்னுளே பிறந்து இறந்து நிற்பவும் திரிபவும்*
*நின்னுளே அடங்குகின்ற நீர்மை நின்கண் நின்றதே.*

*(தரங்கம்-அலை, திரிபவும்-மாறுவதும், நீர்மை-குணம், தன்மை)*

தனக்குள்ளே திரண்டு எழுகின்ற அலைகடல் தனக்குள்ளே அடங்கிப் போவதுபோல் உயிர்கள் அனைத்தும் உனக்குள்ளே பிறந்து திரிந்து உனக்குள்ளேயே அடங்குகின்ற குணம் உன்னிடத்தில் நிலைத்துள்ளது.

இந்தப் பாசுரம் 'குலங்களாய் ஈரரிண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்' என்று தன்னை அடையாளம் காட்டிக் கொள்ளும் திருமழிசை ஆழ்வாரின் திருச்சந்த விருத்தத்தில் உள்ளது. ஓசைநயமிக்க சந்தக் கலிவிருத்த வடிவில் 120 பாடல்களில் இது ஒன்று.. பாட்டுத் திறமைக்கும் பிறந்த குலத்துக்கும் சம்பந்தமில்லை என்பதை நிரூபிக்கிறது. ஆழ்வார்கள் எல்லாக் குலங்களிலும் உள்ளவர்கள்.

இந்த வடிவத்தை இவருக்குப்பின் சிவவாக்கியர் பயன்படுத்தியிருக்கிறார்.



# 6. திருவிருத்தம் ஓர் அருவிருத்தம்

நம்மாழ்வாரின் திருவிருத்தம் நூறு கட்டளைக் கலித்துறைப் பாக்களைக் கொண்டது.

அந்தாதி வடிவத்தில் உள்ள அகத்துறைப் பாடல்கள். அகத்துறை என்றால் தலைவன், தலைவி, செவிலி, தோழி, நற்றாய், பாங்கன் போன்ற தீர்மானித்த பாத்திரங்கள் பேசுவதுபோல அமைந்த பாக்கள். சங்கப் பாடல்களின் மரபில் வந்தவை இவை. குறுந்தொகை, அகநானூறு, நற்றிணை, ஐங்குறுநூறு போன்றவை அகத்துறைப் பாடல்களின் தொகுப்பு நூல்கள். சுமார் எட்டாம் நூற்றாண்டில் பக்தி இலக்கியம் தோன்றினபின் அகத்துறைப் பாடல்களின் அற்புதத்தை இழக்காமலிருக்க அவற்றை தொல் காப்பியத்தில் சொன்ன அதே விதிகளை சற்று மாற்றி தலைவனை மட்டும் மானுடனிலிருந்து கடவுளாக மாற்றி பக்தியும் காதலும் ஒன்றுதான் என்கிற ஆழமான கருத்தை வலியுறுத்தினார்கள். அவர்களில் நம்மாழ்வார் சிறந்தவர். திருவிருத்தத்தின் பாசுரங்கள் நேரடியாகப் புரிவது கொஞ்சம் கஷ்டம்தான். பதம் பிரித்துப் பொருள் உணர்ந்தால் பல ஆச்சரியங்கள் கிடைக்கும்.

உதாரணம்: இந்த பாடலை முதலில் நேரடியாக படித்துப் பாருங்கள்.

''மலர்ந்தே ஒழிந்தில மாலையும் மாலைப்பொன் வாசிகையும்
புலந்தோய் தழைப்பந்தர் தண்டுற நாற்றிப் பொருகடல்சூழ்
நிலந்தாவிய எம்பெருமான் தனது வைகுந்தமன்னாய்
கலந்தார் வரவுஎதிர்கொண்டு வன்கொன்றைகள் கார்த்தன.''

(ஒழிந்தில-இன்னும் மலரவில்லை, பொன்வாசிகை- பொன்னா லான வட்டமாலை, பந்தர்-பந்தல், நாற்றி-தொங்கவிட்டு, வைகுந்தமன்னாய்-வைகுண்டத்தைப் போன்றவளே, கலந்தார்-கூடினவர், கார்த்தன-அரும்பின)

*கொன்றை மலர்கள் இன்னும் மலரவில்லை,*
*நெருக்கமான பந்தல் போன்ற கிளைகளில்*
*தங்கநிற மலர்களை இன்னும் தரவில்லை.*
*கடல்சூழ்ந்த உலகத்தைத் தாவி அளந்த*
*பெருமானின் வைகுந்தம் போன்றவளே!*
*உன்னுடன் கலந்தவர்*
*வரவை எதிர்பார்த்து*
*அரும்புகள் மலரக் காத்திருக்கின்றன.*

இப்போது இந்தப் பாடலின் அழகு தெளிவாகிறதல்லவா?

தோழி தலைவிக்குச் சொல்வது இது. கொன்றை மலர்கள் மலர்ந்துவிட்டன. 'கார்காலத்தில் வருவேன்' என்று சொன்ன தலைவன் இன்னும் வரவில்லையே என்று வருத்தப்பட்ட தலைவிக்கு தோழி சமாதானம் சொல்வது. அவன் வரப் போகிறான் என்ற சந்தோஷத்தில்தான் இவை மலரப் போகின்றன. இது ஒரு காலமயக்கு என்கிறாள். இவ்வகையான பாடல் குறுந்தொகையிலும் உள்ளது; தலைவன்தான் வேறு.

ஒன்பதாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட இப்பாடலை இருபதாம் நூற்றாண்டில் ஏ.கே.இராமானுஜன் ஆங்கிலத்தில் எப்படித் தந்திருக்கிறார் என்பதை இப்போது வியக்கலாம்.

*They haven't flowered yet,*
*the fat konrai trees,*
*nor hung out their garlands*
*and golden circlets*
*in their sensual canopy of leaves*
*along the branches*
*dear girl,*
*dear as the paradise of our lord*
*who measured the earth*
*girdled by the restless sea,*
*they are waiting*
*with buds*
*for the return*
*of your lover*
*once twined in your arms.*

# 7. மீனாய்ப் பிறந்தாலும் போதும்

திருப்பதியில் பிரம்மோற்சவம் நடைபெறுவதையும் தினம் தினம் உற்சவர் யானை வாகனம், கருட வாகனம், சந்திரப்ரபை, முத்துப் பல்லக்கு போன்ற வாகனங்களில் வீதி வலம் வருவதையும் பக்தர்கள் மெய்ம்மறந்து ஆடுவதையும் பாடுவதையும் ஜொலிக்கும் வைர நகைகளையும் அலங்காரத் தங்கக்குடைகளையும் தற்போது தொலைக்காட்சி மூலம் கண்டுகளிக்க முடிகிறது. பெருமாள் பக்கத்திலேயே உட்கார்ந்து பார்ப்பது போலக் காட்டுகிறார்கள்.

வீட்டுக்குள் சோபாவில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு எந்தவித மெய்வருத்தமும் இல்லாமல் பெருமாளைப் பார்க்க முடிகிறது. தரிசிக்க முடியவில்லை!

தரிசனம் என்பதில் கொஞ்சம் நம் உடல் உழைப்பு வேண்டும். அங்கே போக வேண்டும். கூட்டத்தில் இடிபட வேண்டும். நம் தினசரி வேஷங்களை ஒத்திப்போட்டுக் காத்திருக்கவேண்டும். கிட்டத்தில் செல்லத் தடைகள் வேண்டும். பசி, மயக்கம் போன்றவை வேண்டும். அதன் இறுதியில் கிடைக்கும் தரிசனத்தில் அத்தனை சிரமங்களும் மேகத்தை விலக்கிவிட்டு ஜொலிக்கும் சூரியன்போல் சட்டென்று ஏற்படும் ஒரு நிமிடப் பரவசம்தான் தரிசனம்.

வரவேற்பறையில் உட்கார்ந்துகொண்டு டெலிபோன் பேசிக் கொண்டு சானல் மாற்றத் துடிக்கும் விரல்களுடன் பார்ப்பதல்ல.

குலசேகராழ்வார் இந்த தரிசனத்துக்காக எல்லா சௌகரியங் களையும் துறக்கலாம் என்கிறார்.

*ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்குழ*
*வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்*
*தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்*
*மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே.*

(ஆனாத -அழியாத)

'வானுலகத்தின் அரம்பையர் சூழ்ந்திருக்கும் இந்திர பதவியும் பூலோகத்தில் அரசபதவியும் எனக்கு வேண்டாம். திருவேங் கடத்தில் சுனையில் மீனாகப் பிறக்கும் விதி கிடைத்தால் போதும்' என்கிறார்.

மற்றொரு பாடலில் 'செடியாய் வல்வினைகள்' என்ற ஓர் அருமையான சொற்றொடரை குலசேகராழ்வார் பயன்படுத்து கிறார். செடிபோலத் திரும்பத் திரும்ப முளைக்கும் கொடிய பாவங்கள் தீர்வதற்கு கோயில் வாசலில் 'படியாய்க் கிடந்து உன் பவள வாய் காணேனே' என்கிறார்.

அந்த அளவுக்கு மிதிபட்டால்தான் தரிசனம் கிடைக்கும்.



# 8. ஞானம் பிறப்பது எப்போது?

ஆழ்வார் பாசுரங்களில் யாப்பமைதி என்பதைப் பற்றி ஒரு தனிக் கட்டுரையே எழுதலாம். யாப்பு என்பது மரபுக்கவிதை எழுதுவதற்கான விதிகளின் தொகுப்பு.

வெண்பா கட்டளைக் கலித்துறை போன்ற இறுக்கமான விதிகள் கொண்ட பாடல்களில் ஆழ்வார்கள் எளிமையாக விஷயங்களை சொல்லியிருப்பதைப் பார்க்கையில் யாப்பு ஒன்றும் அவ்வளவு கடினமானதல்ல என்று தோன்றும்.

தமிழார்வமும் பக்தியும் சிறந்து கலந்தால்தான் இந்த எளிமை கிடைக்கும்.

சந்தக்கலி விருத்தம் என்றொரு பா வகை உண்டு. சிவவாக்கியர் பாடல்களிலும் திருமழிசை ஆழ்வார் பாடல்களிலும் இந்த வகையை கண்டுகளிக்கலாம். தானதந்த தானதந்த தானதந்த தானனா என்று ஒவ்வொரு வரியும் துள்ளிக் குதிக்கும். இந்த சந்தத்தில் ஆழமான கருத்துகளையும் ஆழ்வாரால் சொல்ல முடிந்திருக்கிறது.

நீங்கள் வைணவக் கோயில்களில் பெருமாள் சேவிக்கச் சென்றிருந்தால் அர்ச்சகர் கற்பூரம் காட்டும்போது நின்ற திருக் கோலம், பள்ளி கொண்ட திருக்கோலம் அல்லது வீற்றிருந்த திருக் கோலம் என்று மூலவரை பெருமாள் நிற்கிறாரா; படுத்துக் கொண் டிருக்கிறாரா; உட்கார்ந்திருக்கிறாரா என்பதை வருணிப்பார். உதாரணமாக ஸ்ரீரங்கத்தில் பெருமாள் படுத்துக் கொண்டிருக் கிறார். திருவல்லிக்கேணியிலும், திருப்பதியிலும் நிற்கிறார். திருஊரகத்தில் நிற்கிறார்; பாடகத்தில் உட்கார்ந்திருக்கிறார்; திருவெஃகா என்ற காஞ்சிபுரத்தருகில் படுத்திருக்கிறார். இதை...

*நின்றது எந்தை ஊரகத்[து] இருந்தது எந்தை பாடகத்து*
*அன்றுவெஃகணைக் கிடந்த[து] என்இலாத முன்எலாம்*

*அன்றுநான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்*
*நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுளே.*

ஊரகம், பாடகம், வெஃகா எல்லாம் திருக்கோயில்கள். ஊரகத்தில் நிற்பவரையும், பாடகத்தில் இருந்தவரையும், வெஃகாவில் படுத்திருப்பவரையும் இவர்களை தரிசித்தபோதெல்லாம் நான் பிறக்கவில்லை.

எனக்கு ஞானம் வந்தததும்தான் பிறந்தேன். பிறந்தபின் மறக்கவே இல்லை. இப்போது எனக்கு இந்தக் கோயில்களுக்கு போகத் தேவையில்லை. என் மனதிலேயே அவர் நிற்கிறார்; உட்கார்ந்திருக்கிறார்; படுத்துக் கொண்டும் இருக்கிறார்.

ஞானம் பிறந்தபின் கோயில்களுக்குப் போகத் தேவையில்லை என்பது அற்புதமான கருத்து. அது எப்போது பிறக்கும் என்பதுதான் கேள்வி. கற்பூரம் காட்டும்போது வேறெங்கோ பார்த்துக் கொண்டிருந்தால் ஞானம் பிறக்கவே பிறக்காது.



# 9. ஒரே ஒரு பாசுரம்

**வை**ணவர்களுக்கு மிக முக்கியமான பாசுரம் எது? அதைமட்டும் தெரிந்து கொண்டால் திவ்யப் பிரபந்தத்தையே தெரிந்துகொண்ட மாதிரி. அப்படி ஒரு பாசுரம் இருக்கிறதா என்று இந்த அவசர உலகத்தில் என்னிடம் கேள்விகள் கேட்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் திருமங்கையாழ்வாரின் இந்தப் பாசுரத்தை பரிந்துரைப்பேன்.

என் தந்தை, 'இந்தப் பாசுரம் ஒன்றே போதும். திவ்யப் பிரபந் தத்தின் சாரம், திருமந்த்ரார்த்தம் இதுதான்' என்பார். இறக்கும் தருவாயில் இந்த ஒரு பாசுரத்தை காதில் சொன்னால் போதும் என்று கூடச் சொல்வார்கள்.

திருமங்கையாழ்வார் திவ்யப் பிரபந்தத்தில் அதிகம் எண் ணிக்கையுள்ள பாடல்களைப் பாடினவர். அதிகம் வைணவத் தலங் களுக்குச் சென்று தரிசித்தவர். வடநாட்டில் தேவப் பிரயாகை, நைமிசாரண்யம் பத்ரிகாசிரமத்திலிருந்து துவங்கி தென்னாட்டில் அத்தனை கோயில்களையும் தரிசித்துப் பாடியுள்ளார். அவர் பாடாத வைணவக் கோயில் இருந்தால் அது சமீபத்தியதாக இருக்கும்.

*குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார்*
*படுதுயர் ஆயினவெல்லாம்*
*நிலந்தரம் செய்யும் நீள் விசும்பருளும்*
*அருளொடு பெருநிலமளிக்கும்*
*வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற*
*தாயினும் ஆயின செய்யும்*
*நலம் தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்*
*நாராயணா என்னும் நாமமே.*

நாராயணன் என்பதற்கு பல அர்த்தங்கள் உண்டு. எளிமை யானது - கடலில் சயனித்திருப்பவன்.

நாரா - உலகத்தின் அத்தனை சேதன அசேதனப் பொருள் களையும் தன்னையும் சேர்த்து அயனன் இருப்பிடமானவன் திருமால் என்பதே இதன் ஆழமான பொருள்.

அந்தச் சொல்லை கைகண்டு கொண்டுவிட்டால் போதும். நமக்கு நல்ல குலம் அமையும்; செல்வம் பெருகும். அடியவர் களுக்கு ஏற்படும் துயரங்கள் எல்லாம் மட்டமாகும் (நிலந்தரம்) பரமபதத்தைக் காட்டும். பெற்ற தாயைவிட அதிகமாகச் செய்யும். நாராயணன் என்ற ஒரே ஒரு சொல்லை மட்டும் கண்டு கொண்டால் போதும். இதெல்லாம் உத்தரவாதம் என்கிறார்.



# 10. எதிர்மறைகள்

தமிழ் மொழியின் பல வசதிகளையும் வார்த்தைகளையும் நாம் இன்று இழந்துவிட்டோம். உலகத்தில் எல்லா சிறப்புகளையும் வப்பர் என்கிற ஒரே வார்த்தையில் வருணிக்கும் அளவுக்கு சோம் பேறிகளாகி விட்டோம். ஆழ்வார்கள் காலத்தில் வார்த்தைகளை அழகாக பல விதங்களில் பயன்படுத்தியுள்ளார்கள், அதை வியக்க வாவது செய்யலாம்.

உதாரணம், எதிர்மறைகள். புகழ்வோம் என்பதற்கு எதிர்மறை புகழ மாட்டோம்; வருவோம்-வரமாட்டோம்; செய்வோம்-செய்ய மாட்டோம் என்று 'மாட்டோம்' என்பதை மாட்டி விடுகி றோம். ஆழ்வார்கள் எதிர்மறைகளை நளினமாகச் சொன்னார்கள். 'புகழ்வோம்' என்பதற்கு எதிர்மறை 'புகழோம்', 'பழிப்போம்' என்பதற்கு 'பழியோம்'. அதே போல அல் என்னும் விகுதியையும் எதிர்மறையாக பயன்படுத்த முடியும். உதாரணம்: சீறு என்றால் கோபித்துக்கொள், சீறல் என்றால் கோபிக்காதே. என்ன ஒரு சௌகரியம் பாருங்கள். அதை இழந்திருக்கிறோம். இப்போது நம்மாழ்வாரின் பெரிய திருவந்தாதியில் உள்ள இந்த வெண்பாவை கவனிக்கலாம்.

> *புகழ்வோம் பழிப்போம் புகழோம் பழியோம்*
> *இகழ்வோம் மதிப்போம் மதியோம்- இகழோம் மற்று*
> *எங்கள் மால் செங்கண் மால் சீறல் நீ தீவினையோம்*
> *எங்கள் மால்கண்டாய் இவை*

*(சீறல்-கோபிக்காதே)*

திருமாலே! ''நாங்கள் உன்னைப் புகழ்வோம், புகழாமல் இருப்போம், பழிப்போம், பழிக்காமல் இருப்போம், கேலி செய்வோம், கேலி செய்யமாட்டோம். கோபித்துக் கொள்ளாதே! பெருமாள் நீ எங்கள் தெய்வமானதால் இந்த பாத்தியதைகளை எடுத்துக் கொள்கிறோம்'' என்கிறார்.

'நல்ல தமிழ்ச் சொற்களை இழந்ததற்காக திருமாலே எங்களை கோபிக்காதே' என்று இன்று வேண்டிக் கொள்வோம்.

# 11. பெருமயல் பெண்

**ப**க்தியும் காதலும் ஒன்றே என்று சொல்லத் தீர்மானித்தபின் ஆழ்வார்களுக்கு திருமாலின்மேல் தங்கள் பக்தியின் பல வடிவங்களை விவரிக்க ஒரு மிகப் பெரிய சௌகரியம் கிடைத்தது போல ஆகிவிட்டது. நம்மாழ்வார் ஒரு தாய் தன் மகள் செய்யும் காரியங்களைப் பற்றி மிகவும் கவலைப்படும் விதத்தில் திருவாய் மொழியில் சில அற்புதமான பாடல்கள் பாடியிருக்கிறார். 'என்ன ஆச்சு இந்தப் பெண்ணுக்கு' என்று கவலைப்படுவதுபோல பல ஆழ்ந்த கருத்துகளை ஒளித்து வைத்து எளிமையாகச் சொல்லி நம்மை வியப்பில் ஆழ்த்துகிறார்.

மயல் என்ற வார்த்தைக்கு பல அர்த்தங்கள் உண்டு. மயக்கம், பித்து, மிகுந்த பிரேமை infatuation. 'மயல் செய்தார்க்கு' என்று சொல்லும்போது பெருமாள் அவளை பைத்தியமாக்கி வைத்திருக் கிறார். சுற்றுப்பட்டவர்களிடம் என்ன செய்யப் போகிறேன் என்று கவலைப்படுகிறார். அவள் செய்யும் காரியங்கள் என்ன என்ன?

*மண்ணை இருந்து துழாவி வாமனன் மண் இதுவென்னும்*
*விண்ணைத் தொழுது அவன்மேவு வைகுந்த மென்று கைகாட்டும்*
*கண்ணை யுண்ணீர்மல்க நின்று கடல்வண்ணன் என்னும் அன்னே! என்*
*பெண்ணைப் பெருமயல் செய்தார்க்கு என் செய்கேன்! பெய்வளையீரே!*

*(மேவும்-வசிக்கும்; அன்னே-துக்கக் குறிப்பு; மயல் - மயக்கம்; பித்து)*

மண்ணைத் துளாவி 'வாமனாவதாரத்தில் முன்பு அளந்த பூமி இது' என்கிறாள். வானத்தை நோக்கித் தொழுது, 'அவன் வாழும் வைகுந்தம் இது' என்று காட்டுகிறாள்.கண்களில் கண்ணீருடன் 'அவன் கடல் நிறத்தவன்' என்கிறாள். என் பெண்ணுக்கு பெரும் பித்தை ஏற்படுத்தியவருக்கு நான் என்ன செய்வேன் வளைய லணிந்த பெண்களே!

. (உங்கள் வளையல்கள் கழலாமல் இருக்கின்றன. என் பெண்ணின் வளையல்கள் அனைத்தும் கழன்றுவிட்டன என்பதை குறிப்பிடுகிறார்)

மண்ணுக்கும் விண்ணுக்கும் அதிபதி நாராயணன்தான் என்பதை அந்தத் தாய் தன் மகளின் வெட்கம் தவிர்த்த செயல்கள் வழியாக கவலை தோன்றும் வாசகங்களில் வருணிக்கும்போது, தெய்வ பக்தி ஒரு பித்து எல்லாவற்றையும் மறந்த நிலை என்பதை மறை முகமாகச் சொல்கிறார். உண்மையாகப் பார்த்தால் தன் மகள் செய்யும் காரியங்களைப் பற்றி அந்தத் தாய் கவலைப்படவில்லை; பெருமைப்படுகிறாள் என்பது உங்களுக்குப் புரிந்தால் சரி.



# 12. அனைத்தும் அவனே

**க**டவுளின் வடிவம் என்ன? அவருக்குப் பெயர் என்ன? எப்படி கடவுளைப் பற்றி நாம் சிந்திப்பது என்ற குழப்பம், மனித சரித்திரத்தில் ஆதி காலத்திலிருந்து உள்ளது. ஆதிமனிதன் இரவின் இருளையும் இடி, மின்னல் போன்ற சமாசாரங்களையும் கண்டு பயந்ததால் அவற்றை ஆளும் வடிவங்களாக கடவுளை எண்ணிப் பார்த்தான். தன்னிலிருந்து வேறுபட்டமைந்த மிருகங்கள் வடிவில் கடவுளை யோசித்தான். தெரிந்த மிருகங்கள், கற்பனை மிருகங் களிலிருந்து தனக்கே அதிக கைகால்கள் சக்திகள் கொடுத்து கடவுள் என்றான்.

மெல்ல மெல்ல தன் வடிவிலேயே கடவுளும் இருக்கிறார் என்று சொல்ல ஆரம்பித்தான். Anthropomorphism என்னும் மனித உருவாக்கத்துக்குப்பின் கடவுளுக்கு வடிவமே தேவையில்லை என்ற தீர்மானத்துக்கு வந்தான். ஆனால் கடவுள் என்ற கருத்தை மனதில் உருவாக்கிக்கொள்ள ஒரு வடிவம் சாதாரண ஜனங் களுக்குத் தேவைப்பட்டது. இதில் மதத்துக்கு மதம் கருத்து வேறுபாடும் பிடிவாதமும் வரும்போது சண்டைகள் வந்தன. என் கடவுள்தான் உண்மையான கடவுள் மற்றதெல்லாம் பொய். தெய் வங்கள் என்று ஒவ்வொரு மதமும் அதனதன் துவக்க காலங்களில் அழுத்தமாகச் சொல்லி அதற்காக உயிர்த் தியாகம் செய்யவும் செய்யலாம். செய்தால் நேராக சொர்க்கத்துக்குப் போகலாம் என்று சலுகைகள் தந்தன.

இன்றைய தினங்களிலும் அம்மாதிரி பிடிவாதங்கள்தான் உலகில் பெரும்பாலும் வடியும் இரத்த ஆறுகளுக்குக் காரணம்.

பொய்கையாழ்வார் காலம் சுமார் கி.பி 600. அப்போதே இம்மாதிரி பூசல்களை சந்தித்திருக்கிறார். பௌத்த ஜைனக் கருத்து களும் சாக்கியமும், சைவமும், வைணவமும் முரண்பட்ட காலம்.

''நாராயணன்தான் கடவுள் என்பதை எப்படிச் சொல்வது? அவன் உருவத்தை எப்படி வேண்டுமானாலும் எடுத்துக் கொள் ளுங்கள். யாரைச் சொன்னாலும் அவனைத்தான் சொல்கிறீர்கள்'' என்றார்.

*தமருகந்ததுஎவ்வுருவம் அவ்வுருவம்தானே*
*தமருகந்ததுஎப்பேர் அப்பேர்- தமருகந்தது*
*எவ்வண்ணம் சிந்தித்து இமையாதிருப்பரே*
*அவ்வண்ணம் ஆழியானாம்.*

*(உகந்தது - விரும்பியது, இமையாதிருப்பரே - இடைவிடாமல் தியானம் செய்தால்)*

எந்த உருவத்தை விரும்புகிறோமோ அதுதான் அவன் உருவம்; எந்தப் பெயரை விரும்புகிறோமோ அதுதான் அவன் பெயர். எப்படிச் சிந்தித்தாலும் நீங்கள் சந்திப்பது கையில் சக்கரமுள்ள திருமால்தான்.

நீ யாரை சிந்தித்தாலும் பேரைச் சொன்னாலும் அவனைத்தான் சொல்கிறாய். அதனால் உன்னுடைய தெய்வத்தையே உன்னு டைய கிரமப்படி வணங்கிக் கொள் என்று அனுமதி தருகிறார்.

'ஈஸ்வர அல்லா தேரோ நாம்' என்று ஒரு தாத்தா பிற்காலத்தில் விரும்பிப் பாடினதும் இதுதான்.



# 13. 'எல்லாம் நானே' என்கிறாள்

பகவத் கீதையில் பத்தாம் அத்தியாயத்தில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு தான் யார் என்று நேரடியாக விளக்கிச் சொல்லும் பிரமிப்பூட்டும் சுலோகங்கள் உள்ளன. பகவத்கீதையை உலகின் தலைசிறந்த நூல்களில் ஒன்றாகச் சொல்வதற்கு முக்கியக் காரணம் இந்த பத்தாம் அத்தியாயம். இதன் கருத்துகளை நம்மாழ் வார் அப்படியே கிரகித்துக்கொண்டு அவற்றை ஒரு தாய் தன் பெண் என்ன என்னவோ பிதற்றுகிறாளே என்று கவலைப் படுவதாக அமைத்த பாசுரங்களாக மாற்றி கீதையின் ஆழ்ந்த கருத்துகளை குறிப்பாக பத்தாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்ட அத்தனை கருத்துகளையும் எளிமையாகச் சொல்லி விடுகிறார்.

*கடல் ஞாலம் செய்தேனும் யானே என்னும்*
*கடல் ஞாலம் ஆவேனும் யானே என்னும்*
*கடல் ஞாலம் கொண்டேனும் யானே என்னும்*
*கடல் ஞாலம் கீண்டேனும் யானே என்னும்*
*கடல் ஞாலம் உண்டேனும் யானே என்னும்*
*கடல் ஞாலம் ஈசன் வந்து ஏறக்கொலோ?*
*கடல் ஞாலத்தீர்க்கு இவை என் சொல்லுகேன்*
*கடல் ஞாலத்து என் மகள் கற்கின்றவே?*

*(கடல் ஞாலம்-கடல் சூழ்ந்த உலகம், கீண்டேன் - பிளந்தேன், கற்கின்றவே - சொல்வதெல்லாம்)*

'நீரையும் நிலத்தையும் செய்ததும் நானே என்கிறாள். அது ஆவதும் நான்; அதைக்கொண்டதும் நான், அதைப் பிளந்ததும் நான்; உண்டதும் நான் என்கிறாள். திருமால் வந்து புகுந்ததாலோ என்னவோ உலகத்தவர்களே, என் மகள் இப்படிப் பேசுகிறாள்'.

இந்தப் பாடலையும் கீதையின் பத்தாம் அத்தியாயத்தின் 32ஆம் சுலோகத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

*ஸர்காணாம் ஆதிர்அந்தஸ்ச மத்யம் சைவாஹம்அர்ஜுன*
*அத்யாத்ம வித்யாவித்யானாம் வாதஹ ப்ரவத்தாம் அஹம்*

'அர்ஜுனா யானே சிருஷ்டி அனைத்தையும் படைத்தவன், காத்தவன், அழித்தவன். அடிப்படை ஞானமும் தர்க்கமும் முடிவு களும் யானே'.

திவ்யப் பிரபந்தத்தில் கீதோபதேசம் பற்றி நேரடியான குறிப்புகள் எதுவும் இல்லைதான். ஆனால் கீதையைப் படித்தி ராமல் நம்மாழ்வாரால் இந்த வரிகளை எழுதியிருக்க முடியாது.



# 14. வடக்கே சென்ற...

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்று இயற்கையை ஐந்தாகப் பிரித்துச் சொல்வது நம் வழக்கம். அதேபோல் குணங்களை (Properties) ஒலி, தொடுகை, உருவம், சாரம், மணம் என்று ஐந்தாகப் பிரிப்பார்கள். இதில் நிலத்துக்கு ஐந்து குணங் களையும் நாம் சொல்ல முடியும். நிலத்தில் சப்தங்கள் உண்டு; அதைத் தொட்டுப் பார்க்கலாம். அதற்கு வடிவம் உண்டு. அதற்கு ரசம், Substance உண்டு, வாசனை உண்டு. நீருக்கு இவற்றில் நான்கு குணங்கள்தான் சொல்லமுடியும். வாசனை கிடையாது *(கார்ப்பரேஷன் நீரை நான் சொல்லவில்லை).*

நெருப்புக்கு சப்தம் உண்டு; தொட்டால் சுடும், வடிவமும் உண்டு. காற்றுக்கு சப்தம் உண்டு அதைத் தொட்டால் உணரலாம் வடிவம் இல்லை. ஆகாயத்தில் சப்தம் மட்டும்தான் உண்டு.

திருமழிசை ஆழ்வார் தன் திருச்சந்த விருத்தத்தில் இந்தக் கருத்தை ஓசை நயத்தோடு சொல்கிறார்.

> *''பூநிலாய வைந்துமாய் புனற்கணின்ற நான்குமாய்*
> *தீநிலாய மூன்றுமாய் சிறந்த காலிரண்டுமாய்*
> *மீநிலாய தொன்றுமாகி வேறுவேறு தன்மையாய்*
> *நீநிலாய வண்ண நின்னை யார்நினைக்க வல்லரே.''*

*(பூ-பூமி, புனல்-நீர், கால்-காற்று, மீ-ஆகாயம், நிலாய-நிலவிய)*

பூமிக்கு ஐந்து குணங்கள், நீருக்கு நான்கு குணங்கள், நெருப் புக்கு மூன்று, காற்றுக்கு இரண்டு, ஆகாயத்துக்கு ஒன்று என்று நீ பரவி இருப்பதை யாரால் எண்ணிப் பார்க்க முடியும் என்று ஆழ்வார் 'எண்ணி'ப் பார்த்திருக்கிறார்.

இது திருச்சந்த விருத்தத்தின் முதல் பாசுரம்.

சிவவாக்கியரின் பாடல்களில்கூட இது அப்படியே 303ஆம் பாடலாக தொகுக்கப்பட்டுள்ளது. இதனால் சிவவாக்கியரும் திருமழிசை ஆழ்வாரும் ஒருவரே என்று கூட சிலர் கருதுகிறார்கள்.

இந்தப் பாடலின் ஆதாரக் கருத்தானது, நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களுக்கும் குணங்கள் கூறுவது. நல்லெழுதியாரின் பரிபாடலில் உள்ளது. இதே கருத்து விஷ்ணு புராணத்திலும் உள்ளது. விஷ்ணு புராணம் ஆழ்வார் களின் காலத்துக்குப் பிற்பட்டது. பரிபாடல் ஆழ்வார்களின் காலத்துக்கு முற்பட்டது.

எனவே பிற்சங்க காலத்திலிருந்து ஆழ்வார் மூலமாக வடக்கு நோக்கிச் சென்றிருக்கிறது இந்த அற்புதமான கருத்து.



# 15. காற்றினிலே வரும்

நல்ல சங்கீதம் கேட்கும்போது நம் அத்தனை செயல்பாடுகளும் நின்று போகக்கூடிய ஓர் அமானுஷ்யமான அமைதியை எப்போதாவது வாழ்வில் நிச்சயம் அனுபவித்திருப்பீர்கள். ஊரெல்லாம் உறங்கி இரவின் மௌனத்தில் தூரத்தில் ஒரு குழலோசை கேட்கிறது. அதைக் கேட்டதும் மெய்ம்மறந்து செய்யும் காரியங்கள் அனைத்தையும் நிறுத்தி விடுகிறோம். எங்கிருந்து வருகிறது அந்தக் குழல் ஓசை? சுற்றிலும் அத்தனையும் ஸ்தம்பித்து விடுகிறது. மரங்களில் இலை அசைவதுகூட நின்று போகிறது. தன்னிச்சையாக மரங்களிலிருந்து தேன் வடிகிறது. மலர்கள் எல்லாம் உதிர்ந்து விடுகின்றன. மரக்கிளைகள் தாழ்கின்றன. அந்தக் கிளைகள் கைகூப்பி வணங்குவது போல சேர்ந்து கொள்கின்றன. அந்தக் குழலோசை வரும் திசை நோக்கி இயற்கையே திரும்புகிறது. அந்தக் குழலை ஊதுவது யார்? கண்ணன் பெரியாழ்வாரைப் போல கண்ணனின் மேல் ஈடுபாடு கொண்டவர். யாருமே இல்லை. கண்ணன் குழல் ஊதுவதை அவர் வர்ணிக்கும் இந்தப் பாடலை படிக்கும் உங்களுக்கும் காற்றில் அந்த கீதம் நிச்சயம் கேட்கும்.

*கருங்கண் தோகை மயிற்பீலி யணிந்து*
*கட்டி நன்கு[உ]டுத்த பீதக ஆடை*
*அருங்கல உருவின் ஆயர் பெருமான்*
*அவன்ஒருவன் குழல்ஊதின போது*
*மரங்கள் நின்று மதுதாரைகள் பாயும்*
*மலர்கள் வீழும் வளர்கொம்பகள் தாழும்*
*இரங்கும் கூம்பும் திருமால் நின்றநின்ற*
*பக்கம் நோக்கி அவை பெய்யும் குணமே*

*(பீலி-இறகு, பீதகஆடை- பீதாம்பரம், அருங்கலம்-அருமையான ஆபரணங்கள் இரங்கும்-உருகும், கூம்பும்-குவியம்.)*

மயிலிறகும் கட்டி உடுத்த பட்டாடையும் அருமையான நகைகளும் அணிந்த கண்ணன் குழலூதும் போதும் பூமி சுழல்வதை சற்று நேரம் நிறுத்திவிடுகிறது!

# 16. திருப்பதிக்கு செல்லும் மேகங்கள்

ஆழ்வார் பாசுரங்களை ரசிக்க முதலில் பதம் பிரித்துக் கொள்ள வேண்டும். அது சில சமயம் எளிதாக இருக்கும். சில சமயம் ரொம்ப கடினமாக. தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் பாசுரங்கள் எளிமை ரகத்தைச் சேர்ந்தவை. நம்மாழ்வாரின் பாசுரங்களும் அப்படியே அவரது திருவிருத்தம் மட்டும் படுத்தும். உதாரணத்துக்கு இந்த *31*ஆம் பாசுரத்தைப் பாருங்கள்.

**இசைமின்கடுதென்றிசைத்தாலிசையிலமென்றலைமே**
**லசைமின்களென்றாலசையுங்கொலாமம்பொன்மாமணிக**
**டிசைமின்மிளிருந்திருவேங்கடத்துவன்றாட்சிமய**
**மிசைமின்மிளிரியபோவான்வழிக்கொண்டமேகங்களே.**

தலைகால் புரியவில்லையல்லவா? இதில் ஒளிந்து கொண் டிருக்கும் பாடல் என்ன பார்க்கலாம். முதலில் பதம் பிரித்தால் கொஞ்சம் வெளிச்சம் கிடைக்கும்.

**இசைமின்கள் னது என்று இசைத்தால் இசையிலம் என் தலைமேல்**
**அசைமின்கள் என்றால் அசையும்கொலோ அம்பொன் மாமணிகள்**
**திசைமின்மிளிரும் திருவேங்கடத்து வன்தாள் சிமயம்**
**மிசை மின் மிளிரிய போவான்வழிகொண்ட மேகங்களே.**

(வன்தாள் சிமயம் - வலிமையான அடிவாரமுள்ள சிகரம்)

இப்படிப் பிரித்தால் இன்னும் கொஞ்சம் தெளிவாகிறது. இந்தப் பாடலில், தலைவி திருவேங்கடமலைக்குச் செல்லும் மேகங்களை தூது போகச் சொல்கிறாள். அவை 'போ போ அதற்கெல்லாம் எனக்கு நேரமில்லை' என்று மறுத்துவிட, 'என் தலையையாவது மிதித்துவிட்டுச் செல்லுங்கள்' என்கிறாள்.

இப்படி ஓர் அழகான ரத்தினத்தை பதம் பிரித்துத் தோண்டி யெடுக்க வேண்டும்.

தமிழை ஒரு agglutinative language என்பார்கள். வார்த்தைகளை ஒட்ட வைத்துக்கொண்டே போகலாம். 'இசைமின்கடுது' என்பதை இசைமின்கள்தூது என்றும், மணிகடிசைமின்மிளிரு-மணிகள் திசை மின் மிளிரும் என்றும் வெளியே கொண்டு வந்தால் கிடைப்பது ஓர் அற்புதமான அகத்துறைப் பாடல். எப்பொழுதும் கைம்மாறு கருதாமல் பிறருக்கு உதவுதலையே இயல்பாக உடைய மேகங்கள் நம் காரியம் செய்யத்தக்கன என்று தலைவி நினைத்து வேங்கட மலைச்சிகரத்தில் மின்னலடிக்கச் செல்லும் மேகங் களிடம் என்னைப்பற்றி பெருமாளிடம் சொல்லுங்கள் என்று கேட்டதில் தூது சொல்ல அவை இசைய(சம்மதிக்க)வில்லை. அதனால் 'என் தலைமேல் உங்கள் பாதத்தை வைத்துவிட்டாவது செல்லுங்கள்' என்று கேட்கிறாள்.

இந்த நாட்களில் திருப்பதிக்கு செல்லும் மேகங்களை லட்டு வாங்கிவர மட்டுமே சொல்வோம்!



# 17. பருவமடையாத பெண்

சங்கப் பாடல்களுக்கும் ஆழ்வார் பாசுரங்களுக்கும் தொடர்பு நிறையவே உண்டு. குறிப்பாக அகத்துறைப் பாடல்களின் விதிகளை பக்தி இலக்கியத்துக்கு ஏற்ப மாற்றிக் கொடுத்த பெருமை ஆழ்வார்களைச் சேரும். குறுந்தொகையின் 337ஆம் பாடலைப் பாருங்கள்.

*முலையே முகிழ்முகிழ்த்தனவே, தலையை*
*கிளைஇய மென்குரல் கிழக்கு விழ்ந்தனவே,*
*செறி முறை வெண் பலும் பறிமுறை நிரம்பின;*
*சுணங்கும் சில தோன்றினவே; அணங்குதற்கு*
*யான் தன் அறிவல்; தான் அறியலளே;*
*யாங்கு ஆகுவள்கொல் தானே*
*பெரு முது செல்வர் ஒரு மட மகளே -பொதுக்கயத்துக் கீரந்தையார்*

*முலைகள் அரும்பின;*
*தலைமயிர் நீண்டு தாழ்ந்தது;*
*பால் பற்கள் விழுந்து முளைத்து விட்டன;*
*உடலில் தேமல் தோன்றியுள்ளது;*
*எனக்குத் தெரிகிறது,*
*அவளுக்கு இன்னும் புரியவில்லை.*
*பணக்காரர்களின் ஒரே பெண்.*
*என்ன ஆகப் போகிறாளோ?*

பொதுக்கயத்துக் கீரந்தையார் என்னும் சங்ககாலப் புலவர் பாடிய இந்தப் பாடல் பருவமடையத் தொடங்கியிருக்கும் பெண்ணைப் பற்றியது. அதன் அடையாளங்கள் எனக்குத் தெரி கின்றன. அவளுக்குத் தெரியவில்லை என்று அவளுக்குப் பருவம் வாய்த்தது தன்னை வருத்தியதாக தலைவன் சொல்வது போன்ற பாட்டு. நம்மாழ்வார், பருவம் இன்னும் அடையாத பெண் திரு

வேங்கடப் பெருமாள் மேல் கொண்ட காதலைப் பற்றி செவிலித் தாய் கவலைப்படுவதாக மாற்றி நளினப்படுத்தியிருக்கிறார்.

*முலையோ முழுமுற்றும் போந்தில மொய் பூங்குழல் குறிய*
*கலையோ அரையில்லை நாவோ குழறும் கடல்மண் எல்லாம்*
*விலையோ என மிளிரும் கண் இவள் பரமே பெருமாள்*
*மலையோ திருவேங்கடம் என்று கற்கின்ற வாசகமே?*

*(குழல்-கூந்தல், குறை-சிறியது, கலை-ஆடை, அரை-இடுப்பு)*

தலைமகள் இளமைக்குச் செவிலி இரங்குவதாக உள்ள 'இந்தப் பாட்டில், இந்தப் பெண்ணுக்கு மார்பே இன்னும் பெரிசாக வில்லை. தலைமயிர் வளரவில்லை. ஆடைகள் இடுப்பில் நில்லாமல் நழுவுகின்றன. பேச்சு சரியில்லை. கண்கள் உலகை விலை பேசும் அளவுக்கு மிளிர்கின்றன. பெருமாள் இருப்பது திருவேங்கடம் என்று மட்டும் கூறுகிறாள் இந்தப் பேதைப் பெண்' என்று ஒரு தாய் இன்னும் பருவம் எய்தாத தன் மகள் திரு மாலையே எண்ணுவதை நினைத்து மனம் வருந்துவதுதான் இதன் நேரடி அர்த்தம்.

இந்தப் பாடலின் 'ஒரு மாதிரியான' விஷயத்தை வைணவர்கள் அப்படியே ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். 'ஸ்வாபதேச' அர்த் தத்தின்படி 'முலை முற்றும் போந்தில' என்றால் பக்தி இன்னும் முழுவதும் பரமபக்தியாகவில்லை. 'குழல் குறிய' என்றால் தலை யால் செய்யப்படும் வணக்கம் போதாது. 'கலை அரையில்லை' என்பதை முயற்சி இன்னமும் நிறைவேறவில்லை. இப்படி டெட்டால் போட்டு சுத்தப்படுத்தித்தான் ஏற்றுக் கொள்கின்றனர்.



## 18. யாவையும் யாவும்

ஒவ்வொரு சமயத்தாரும் கடவுள் அப்படியிருப்பார் இப்படி யிருப்பார், அவருக்கு இன்ன இன்ன குணங்கள் என்று விவரிக் கின்றனர். எங்கள் கடவுள்தான் நிஜமான கடவுள் மற்றதெல்லாம் பொய் என்றும் சில மதங்கள் கூறுகின்றன. சிலர் கடவுள் இல்லை என்று சொல்லி விக்கிரகங்களை உடைக்கிறார்கள். இந்துக்கள் தம் கோயில்களில் கடவுளை பல வடிவங்களில் விக்கிரகங்களாக வழிபடுகின்றனர். இது பிற சமயத்தவருக்கு வியப்பாக இருக்கும். சித்தர்கள் கூட இதை கேலி செய்திருக்கிறார்கள்.

இறைவனின் விக்கிரக வடிவை 'அர்ச்சாவதாரம்' என்று சொல் வார்கள். இது என்ன என்பதை ஆச்சார்ய ஹ்ருதயம் என்னும் நூல் விளக்குகிறது. பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம் என்னும் நான்கு நிலைகளில் உள்ள குணங்களையும் அர்ச்சாவ தாரத்தில் காணலாம் என்று சொல்கிறது. தமிழில் சொன்னால் பரமபதத்தில் இருப்பது (பரத்துவம்) பாற்கடல் சூழ்ந்திருப்பது (வியூகம்) அவதார வடிவங்களில் இருப்பது (விபவம்) எங்கும் ஊடுருவியிருப்பது அந்தர்யாமித்துவம் இவை அனைத்தையும் ஒரு விக்கிரகத்தின் மூலம் காணலாம் என்கிறது.

எளிய மனங்களுக்கு உயர்ந்த தத்துவங்கள் புரியாது. ஆனால் ஓர் அழகான விக்கிரகத்தை கடவுளின் பிரதிநிதியாக ஒரு பாவனையாக ஏற்பதில் கஷ்டம் இருக்காது. இருந்தும் பகவான் விக்கிரகங்களுக்கு அப்பாற்பட்டவர் என்பதை மறக்கக்கூடாது. அவனை அடையவேண்டும் என்றால் வடிவங்களுக்கு அப்பால் சிந்திக்க வேண்டும்.

*யாவையும் யவரும் தானாய்*
*அவரவர் சமயம் தோறும்*
*தோய்விலன் புலன் ஐந்துக்கும்*
*சொலப்படான் உணர்வின் மூர்த்தி*

ஆவிசேர்உயிரின்உள்ளால்
ஆதுமோர் பற்றிலாத
பாவனை அதனைக் கூடில்
அவனையும் கூடலாமே

எல்லாமும் அவன்தான் எல்லாரும் அவன். அவரவர் மதங்களால் பாதிப்பு இல்லாதவன் (தோய்விலன்) ஐந்து புலன்களுக்கும் சொல்ல முடியாமல் உணர்வின் வடிவமாய் உயிரின் உள்ளே போய் யோசித்தால், பற்று எதும் இல்லாத ஒரு பாவனையை எட்டிப் பிடிக்க முடிந்தால் அவனைத் தொட்டுப் பார்க்க முடியும்.

திருவாய்மொழியில் நம்மாழ்வார் யோசித்த அளவுக்கு நம்மால் யோசிக்க இயலாது. அதனால் முமுட்சுப்படி என்னும் வைணவ நூலில் சொன்னபடி விக்கிரகங்கள்தான் 'பர வியூக விபவங்கள் போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படி இருக்கும்.' விக்கிரகங் களை உடைக்கக் கூடாது.



# 19. எந்த வாரம் இந்த வாரம்

தஞ்சைப் பகுதியில் நிலச் சொந்தக்காரர்களையும் குத்தகைக் காரர்களையும் மேல்வாரம், குடிவாரம் என்று இன்றும் சொல் கிறார்கள். திருப்பாணாழ்வாரின் இந்தப் பாடலில் வாரம் வருகிறது.

*பாரமாய பழவினை பற்றறுத்து என்னைத்தன்*
*வாரமாக்கிவைத்தான் வைத்ததன்றி யென்னுள்புகுந்தான்*
*கோரமாதவம் செய்தனன் கொலறியேனரங்கத்தம்மான் திரு*
*ஆரமார்பதன்றோ அடியேனை யாட்கொண்டதே*

'சுமையாக நின்ற பழைய பாவங்களின் சம்பந்தத்தைத் தொலைத்து என்னைத் தன்னிடத்தில் அன்புடையவனாகப் பண்ணிவைத்தான். அதுமட்டுமல்லாமல் என் இதயத்துக்குள் நுழைந்து விட்டான். உக்ரமான தவம் ஏதாவது நான் முற்பிறவியில் செய்திருக்க வேண்டும், தெரியவில்லை. திருவரங்கனின் மார்பன்றோ என்னை ஆட்கொண்டது.'

திருப்பாணாழ்வார் திவ்யப் பிரபந்தத்தில் பத்து பாடல்கள்தான் பாடியுள்ளார். பத்தும் முத்துக்கள்.

இந்த உருக்கமான பாடலில் உள்ள 'வாரம்' என்பதற்கு பல பொருள்கள் உள்ளன. என்னைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டு விட்டான். பகவான் என் எஜமானன், நான் அவரிடம் வாடகைக்கு இருக்கிறேன் என்கிற அர்த்தம் கவிதை நயமும் ஆழமும் மிக்கது. 'பங்காகப் பற்றும்படி செய்தான்' என்கிற பொருளும் வாரம் என்பதற்கு உண்டு. 'வாரமாக ஓதுவார்கள்' என்றால் நிஷ்டையாக நியமமாக ஓதுகிறவர்கள். 'வாரம் நடப்பது' என்பது கோயிலுக்கு பிரார்த்தனை செய்து கொண்டு போவது. 'வாரமோதல்' என்பது உருச்சொல்வது. litany நியமமாக சொல்லுதல். இப்படி பல படிமங்கள் கொண்ட சொல்லில் திருப்பாணாழ்வார் சொல்வது எந்த வாரம் என்று நீங்களே தீர்மானிக்கலாம்.

'வாரம் ஒரு பாசுரம்' என்ற ஒரே ஒரு பிரயோகத்தில் மட்டும் இன்று இந்தச் சொல் முடங்கிக் கிடக்கிறது.

# 20. ஒழிக்க ஒழியாது

மார்கழி மாதம் ஒவ்வொரு நாளும் திருப்பாவையின் பாசுரங்கள் சொல்லி தமிழர்கள் வாழும் எல்லா நகரங்களிலும் விரிவான விளக்கங்கள் சொல்வார்கள். என் தந்தையார் காரப்பங்காடு வெங்கடச்சாரியார் ஸ்வாமிகளிடம் திருப்பாவை வியாக்கியானம் கேட்பார். ஒருமுறை என்னை அழைத்துச் சென்றிருந்தார். அத்தனை விரிவாக ஒரு பாசுரத்துக்கு விளக்கம் நான் கேட்டதில்லை. முழுசாக இரண்டரை மணிநேரம் ஒரே ஒரு பாசுரம்!

உத்தியோகக் கட்டாயங்களினால் நான் என் பெற்றோரைப் பிரிந்து பல ஊர்களுக்குச் சென்று அலைந்து திரிந்து ஸ்ரீரங்கம் வந்து அவசரத்தில் திரும்பும்போது 'ஸாரிப்பா! உன்னோட அதிகம் பேச முடியல' என்று மன்னிப்புக் கேட்பேன். அதற்கு அவர் 'பரவாயில்லை, உனக்கும் எனக்கும் உள்ள உறவு ஒழிக்க ஒழியாது' என்பார். இந்த சொற்றொடர் திருப்பாவை 28ஆம் பாசுரத்தில் வருகிறது.

*கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்து [உ]ண்போம்*
*அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்து [உ]ன்தன்னை*
*பிறவி பெறுந்தனை புண்ணியம் யாம் உடையோம்*
*குறையொன்றும் இல்லாத கோவிந்தா! உன் தன்னோ[டு]*
*உறவேல் நமக்கிங்கொழிக்க ஒழியாது*
*அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்*
*சிறுபேர் அழைத்தனவும் சீறி அருளாதே*
*இறைவா! நீ தாராய் பறை ஏலோர் எம்பாவாய்.*

*[திருப்பாவை, 28]*

*(கறவை - பசு, சிறுபேர் - செல்லப்பெயர்)*

பசுக்களின் பின்னால் போய் காட்டை அடைந்து கட்டுச்சோறு தின்பவர்கள் நாங்கள். அதிக அறிவில்லாத எங்கள் இடைக்

குலத்தில் நீ வந்து பிறக்கும் புண்ணியம் எங்களுக்குக் கிடைத்தது. குறையற்றவனே! கோவிந்தனே! உன்னோடு எங்கள் உறவு ஒழித்தாலும் ஒழியாதது. அறியாத சிறுமிகள் உன்னை அன்பினால் 'நீ', 'வா' என்றெல்லாம் அழைக்கிறோம். கோபிக்காதே! எங்களுக்கு வேண்டியதைத் தருவாய்.

கல்வியற்றவர்களும் பக்தியால் அவனுடைய அருளைப் பெறலாம். பகவானுக்கும் ஆத்மாக்களுக்கும் உள்ள தொடர்பு ஆரம்பமற்றது. எப்போதும் இருப்பது. அதை பகவானாலும் ஆத்மாக்களாலும் தனியாகவோ சேர்ந்தோ ஒழிக்க முடியாது. 'என்று நீ அன்று நான்' என்று தாயுமானவர் சொல்வதுபோல... உண்மையான உறவுகள் அனைத்துமே ஒழிக்க ஒழியாதது. கணவன்-மனைவி, அப்பா-பிள்ளை, தாய்-மகள், நண்பர்கள்- காதலர்கள் ஏன் எதிரிகளோடு கூட ஒழிக்க முடியாத உறவுகள்தான்!



# 21. வீட்டுக்குச் செல்லும் வழி

**'வி**டுப்பா வீட்டுக்கு போகலாம்'

இந்த எளிய உரையாடலை யோசியுங்கள்.

'விடு' என்கிற வினைச்சொல்லைப் பெயர்ச் சொல்லாக்கும் போது 'வீடு' என்றாகி விடுதலையைக் குறிக்கிறது; நட்டபின் வீடில்லை (நட்பை எளிதாக விட்டுவிடமுடியாது ) என்கிறது குறள். வீடெனப்படும் வினைவிடுதல் என்று சீவக சிந்தாமணியில் கரும வினைகள் நீங்குதல் என்கிற பொருளில் வருகிறது. இவை எல்லாம் வெளியே அழைக்கின்றன. அதேசமயம் மற்றொரு கோணத்தில் வீடு என்பது நம்மை அறைகளுக்குள் கட்டிப் போடு கிறது. வீடு என்று சொல் மனை, இருப்பிடம் என்ற பொருளில் முதலில் புறப்பொருள் வெண்பாமாலை என்னும் நூலில் வருகிறது. தமிழில் வீட்டுக்குப் பல பொருள்கள் உண்டு. வசிக்கும் இடம், சொர்க்கம், விடுதலை, ஜோசியர்கள் சொல்லும் கிரகங்களின் இருப்பிடம் இப்படி இந்தச் சொல்லின் எல்லா பயன்பாடுகளை யும் நம்மாழ்வார் ஒரு சிறிய வஞ்சிப்பாவில் வைத்திருக்கிறார்.

*வீடுமின் முற்றவும்*
*வீடு செய்து உம்முயிர்*
*வீடுடையானிடை*
*வீடுசெய்ம்மினே.*

முதல் 'வீடு', 'வீடுமின்' விட்டுவிடுங்கள் என்று ஆணை யிடுகிறது. முற்றவும் வீடுசெய்து எல்லாவற்றையும் இவ்வாறு விட்டபின் வீடுடையானிடை- முக்தி அளிப்பவனிடத்தில், வீடுசெய்ம்மின்- ஒப்படைத்துவிடுங்கள். ஒரு வீடு விடுதலை வேண்டுகிறது, ஒரு வீடு சொர்க்கம் காட்டுகிறது, ஒரு வீடு ஒப்படைக்கிறது. 'முற்றவும்' என்பது முக்கியம். யான், எனது என்ற இருவகைப் பற்றையும் பரிபூர்ணமாக விட்டுவிடவேண்டுமாம்.

நதியில் மூழ்கப் போகிறவன் ஆடை அவிழ்ந்து வெள்ளத்தில் சென்றால் கவலைப்படமாட்டான். அதுபோல கடைசி ஆசை களையும் துறந்து வீடுடையானிடத்தில் வீடுசெய்தல் வேண்டும். அப்போதுதான் நம்மால் வீட்டுக்குப் போகமுடியும்.

## 22. விழுங்கினவனை விழுங்கினேன்

மதுரைக்குப் பக்கத்தில் உள்ள அழகர் மலையின் பழைய பெயர் திருமாலிருஞ் சோலை. நம்மாழ்வார் திருவாய்மொழியில் இதன் பெருமானைப் பற்றி பல பாசுரங்கள் பாடியிருக்கிறார். அவற்றில் எதை எடுத்தாலும் வியப்பளிக்கும், தமிழ் கொஞ்சும். உதாரணம்...

*பேரே உறைகின்ற பிரான் இன்று வந்து,*
*பேரேன் என்று, என் நெஞ்சு நிறையப் புகுந்தான்;*
*கார் ஏழ், கடல் ஏழ், மலை ஏழ், உலகு உண்டும்*
*ஆரா வயிற்றானை அடங்கப் பிடித்தேனே.*

பிரபஞ்சத்தை முழுவதும் விவரிக்க முடியாது. அதன் விஸ்தாரத்தை எளிமையாகச் சொல்ல ஏழுகடல், ஏழுமலை, ஏழு உலகங்கள் என்று உருவகப்படுத்துவது பண்டைய வழக்கம். Seven seas என்று படித்திருப்பீர்கள். இப்படி ஏழு ஏழாக அடுக்கி அவை அனைத்தையும் கிருஷ்ணன் சிறு குழந்தையாக இருக்கும்போது உண்டவர் என்று ஒரு கதை சொல்வார்கள். யசோதை 'வாயைத் திற' என்று அதட்டி கேட்டதில் அந்த தாய்க்கு தொண்டைக்குள் ஏழுலகங்களையும் காட்டி ஓர் அதிர்ச்சி தந்தாராம்.

எப்படி ஒரு சிறு குழந்தையால் அத்தனை பெரிய உலகை உண்ண முடியும் என்று வியப்பாக இருக்கும். இந்த தத்துவத்தின் உட்பொருள் கடவுள் பிரபஞ்சம் அனைத்தையும் தனக்குள் அடக்கியவர் என்பது. இந்தப் பரந்து விரிந்த கருத்துக்கு ஒரு படி மேலே சென்று ஆழ்வார், அத்தகைய பிரம்மாண்டமான பிரான் எனக்குள் வந்து என் நெஞ்சு நிறையப் புகுந்து கொண்டு விட்டான். அவனை அப்படியே அடக்கிப் பிடித்துக் கொண்டேன் என்னும் போது கடவுள் எல்லையற்றவராயினும் பக்தியின் எல்லைக்குள் அகப்படுவார் என்கிறார்.

பேரே உறைகின்ற-பெயர் பெற்ற ஊரில் உள்ள பிரான் இன்றைக்கு வந்து உன்னை விடமாட்டேன் என்று என் நெஞ்சை நிரப்பிவிட்டான். ஏழு மேகங்கள், ஏழு கடல், ஏழு மலைகள், ஏழுலகங்களைச் சாப்பிட்டும் ஜீரணிக்காத வயிறுள்ளவனை அடங்கப் பிடித்தேனே!

'கடவுள் உலகை உண்டார் கடவுளை நான் உண்டேன்' என்கிறார்.

'நான் உன்னையன்றி இலேன் கண்டாய் நாரணனே நீ என்னைஅன்றி இலை' என்பது வைணவத்தின் முக்கியமான கருத்து. இந்தப் பாடலை ஏ.கே.இராமானுஜன் அருமையாக ஆங் கிலத்தில் மொழிபெயர்த்திருப்பதைப் படிக்கும்போது முந்தாநாள் எழுதிய கவிதைபோலத் தொனிக்கிறது!

*My lord*
*who lives in the city*
*of names*
*came here today*
*said he'd never leave*
*entered me*
*filled my heart*

*I've caught him*
*the big-bellied one*
*not content yet*
*with all that guzzling*
*on the sevenfold clouds*
*the seven seas*
*the seven mountains*
*and the world that holds them all*

*I've caught him*
*I contain him now.*



# 23. இறுதியில் 'அவன் தான்'

'ஓர்மை' என்ற சொல் மலையாளத்தில் 'ஞாபகம்' என்ற அர்த்தத்தில் இன்றும் பயில்கிறது. 'ஓர்மையுண்டு' என்றால் நினைவிருக்கிறது என்று பொருள். 'ஓர்தல்' என்ற தமிழ்ச் சொல்லிலிருந்து வந்திருக்கலாம். ஓர்தல் என்றால் 'ஆராய்ந்து அறிதல்'. திருமழிசை ஆழ்வார் நான்முகன் திருவந்தாதியில் இந்தச் சொல்லைப் பொருத்தமாகப் பயன்படுத்தியுள்ளார். அந்தாதி வடிவில் 96 அற்புதமான நேரிசை வெண்பாக்களைக் கொண்டது. கருத்துச்செறிவும் பக்தியும் மிக்கது. அந்தாதி உண்மையில் ஒரு சொல்மாலை பூக்களைக் கோப்பது போலப் பாக்களைக் கோத்து செய்யப்பட்ட வட்டம். ஒருபாட்டின் முடிவில் அடுத்த பாட்டின் ஆரம்பச்சொல் இருக்கும். கடைசிப் பாட்டின் கடைசிச் சொல் முதற்பாட்டின் முதல் சொல்லாக இருக்கும். நான்முகன் திருவந்தாதியில் முதல் பாசுரம் நான்முகனை நாராயணன் படைத்தான் என்று துவங்கும் 96ஆம் பாடல் 'நன்கு அறிந்தேன் நான்' என்று முடியும். இதில் ஒரு பாடலை இந்த வாரம் பார்க்கலாம்.

*தேருங்கால், தேவன் ஒருவனே என்று உரைப்பர்;*
*ஆரும் அறியார் அவன் பெருமை; - ஓரும்*
*பொருள் முடிவும் இத்தனையே; எத் தவம் செய்தார்க்கும்*
*அருள் முடிவது ஆழியான்பால்.*

(தேருங்கால் - ஆராயும்போது, ஆழியான் - சக்கரத்தைக் கையில் வைத்திருப்பவன் அல்லது கடலில் துயில்பவன்- திருமால்)

ஆராய்ந்து பார்க்கும்போது தேவன் ஒருவனே என்று சொல்வார்கள். யாரும் அவன் பெருமையை அறிய முடியாது. எப்படி ஆராய்ந்தாலும் இந்த முடிவுக்கு வந்தே தீர வேண்டும். என்ன தவம் செய்தாலும் இறுதியில் அருள் கிடைப்பது திருமாலிடம் மட்டுமே.

திருமழிசை ஆழ்வார் இவ்வந்தாதியின் கடைசிப் பாடலில் நாராயணனை 'காரணன் நீ, கற்றவை நீ, கற்பவை நீ' என்கிறார். இதுவரை கற்றதும், இனிமேல் கற்கப் போவதும் நாராயணனே எனக் கருதும் இவருக்கு அருள் முடிவும் அவன்தான் என்பது தவிர வேறு எந்த முடிவுக்கு வரமுடியும்?

# 24. அந்தணன் யார்?

தமிழில் பல சொற்கள் காலப்போக்கில் பொருள் மாறுகின்றன. ஐயர் என்ற சொல் சங்க காலத்தில் 'தலைவர்' என்ற பொருளில் தான் பயின்று வந்தது. இன்று அது கேலி வார்த்தையாகிவிட்டது.

'அந்தணன்' என்ற சொல்லும் அப்படி காலப்போக்கில் பொருள் மாறிவந்துள்ளது. திருக்குறள் 'அறவாழி அந்தணன்' என்று கடவுளைக் குறிக்கிறது. மற்றொரு குறளில் 'அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலால்' என்று எல்லா உயிர்களின் மேலும் அன்பு செலுத்துபவர்களை அந்தணர் என்றது.

இந்த உயர்ந்த பொருளில்தான் திருமங்கையாழ்வார் தன் திருநெடுந்தாண்டகத்தில் இந்தப் பாடலில் அந்தணனைப் பயன் படுத்தியுள்ளார்.

> ***இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன்-தன்னை***<br>
> ***இருநிலம், கால், தீ, நீர், விண், பூதம் ஐந்தாய்,***<br>
> ***செந்திறத்த தமிழ் ஓசை வடசொல் ஆகி,***<br>
> ***திசை நான்குமாய்த் திங்கள் ஞாயிறு ஆகி,***<br>
> ***அந்தரத்தில் தேவர்க்கும் அறியல் ஆகா***<br>
> ***அந்தணனை, அந்தணர் மாட்டு அந்தி வைத்த***<br>
> ***மந்திரத்தை, மந்திரத்தால் மறவாது என்றும்***<br>
> ***வாழுதியேல் வாழலாம், மட நெஞ்சமே!***

*(கால் - காற்று)*

இந்திரனுக்கும் பிரம்மனுக்கும் முற்பட்டவன். நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்று ஐம்பூதங்களாய் தமிழ் ஓசையாய் வடசொல்லாய் நான்கு திசைகளாய் சூரியச் சந்திரராய் தேவலோ கத்தில் உள்ள தேவர்களாலும் அறிய முடியாத அந்தணன் (சிறந்தவன்) அவனை மந்திரங்கள் சொல்லி மறக்காமல் தினம் வாழ்த்தினால் நீ வாழலாம் என் பேதை நெஞ்சமே!

எண் சீர்விருத்தம் என்னும் விரிவான வடிவம் கொண்ட 30 பாசுரங்கள் கொண்டது திருநெடுந்தாண்டகம். திருமங்கையாழ் வாரின் புலமைக்கும் பக்திக்கும் ஒரே சமயத்தில் ஈடு கொடுக்கும் பாடல்கள் அவை.

# 25. நூறாயிரம் தவலை

**'தடா'** என்ற சொல் இப்போதெல்லாம் தீவிரவாதத்தை அடக்க ஏற்பட்ட சட்டத்தைக் குறிக்கிறது.

எட்டாம் நூற்றாண்டில் ஒரு தடா இருந்தது. இப்போதும் தென்மாநிலங்களில் பயன்படும் சொல் இது. தவலை என்ற பொருளில் பெரிய, வாயகன்ற பாத்திரத்தைக் குறிக்கும். இதில் நூறு தடா எடுத்துக் கொள்வோம். அதை 'கொலஸ்ட்ரால்' கவலையின்றி வெண்ணெயால் நிரப்புவோம்! அதை வைத்துக் கொண்டு அக்கார அடிசில் பண்ணச் சொல்வோம். அக்கார அடிசில் என்பது முழுக்க பாலிலேயே சமைத்து வெல்லம் கற்கண்டு எல்லாம் சேர்த்து முழங்கைவரை நெய் சொட்டச் சொட்ட செய்யும் அமுது.

திருமாலுக்கு இது பிடிக்கும். இதை மட்டும் என் இறைவன் ஏற்றுக் கொள்கிறான் என்றால் நூறு என்ன நூறாயிரமே ஏற்பாடு செய்கிறேன் என்கிறாள் அந்தப் பேதைப் பெண்.

எப்படியாவது பெருமாளை ஆசைக்காட்டி வரவழைக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் உலகத்தில் செய்யக்கூடியது, செய்ய முடியாதது அத்தனையையும் ஒரு சிறுகுழந்தை போல் சத்தியம் பண்ணிக் கொடுக்கிற அந்தப் பெண் வேறு யார்? ஆண்டாள்தான்.

நாச்சியார் திருமொழியில் இந்தப் பாசுரம் வருகிறது.

*நாறு நறும் பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு, நான்*
*நூறு தடாவில் வெண்ணெய் வாய் நேர்ந்து பராவி வைத்தேன்;*
*நூறு தடா நிறைந்த அக்கார அடிசில் சொன்னேன்;*
*ஏறு திருவுடையான் இன்று வந்து இவை கொள்ளுங்கொலோ?*

*(தடா-தவலை, பராவி-நிரப்பி.)*

வாசனை மிகுந்த பொழில் சூழ்ந்த மாலிருஞ்சோலை நம்பிக்கு நூறு தடாவில் வெண்ணெய் வார்த்து நூறு தடாவில் அக்கார அடிசிலும் சொல்லியிருக்கிறேன். அந்த நாராயணன் இன்று இதையெல்லாம் எடுத்துக் கொள்ள வருவானோ? என்று கேட்கிறாள்.

திருமால் 'ஒன்று நூறாயிரமாக'க் கொடுத்தாலும் அக்கார அடிசிலுக்கு மயங்கிப் பிரத்யட்சமாவாரா? வரமாட்டார். சரி, மாலிருஞ்சோலையில் கொன்றை மரம் இருக்கிறதே அதில் ஒரு பொன்னிறப் பூவாகத் தொங்குகிறேன்.

'கொன்றைகள் மேல் தூங்கு பொன்மாலைகளோடு உடனாய் நின்று தூங்குகின்றேன்' (தூங்குதல்-தொங்குதல்) அப்படியாவது அவனது சங்கநாதமும் வில்லின் நாண் ஒலியும் கேட்கக் கிடைக் குமா? என்று ஏங்குகிறாள்.

ஆண்டாளின் பகுத்தறிவுக்கு அப்பாற்பட்ட பக்தியும் அன் யோன்மும் பிடிவாதமும் உலகில் வேறு எந்த மொழி இலக்கியத் திலும் இல்லை என்று சொல்லலாம்.



# 26. இறைவனுக்கு நிறம் உண்டா?

இறைவனை ஆண்பாலாகச் சொல்வதையே இப்போதெல்லாம் கேள்வி கேட்கிறார்கள். இறைவன் எப்படி இருப்பான்? வெள்ளையா சிவப்பா பச்சையா கறுப்பா என்ன அவன் உருவம்? இதை யார் அறிவார், யாரால் சொல்ல முடியும் என்று கேட்டு விட்டு பேயாழ்வார் அருமையாக ஒரு பதில் சொல்கிறார்.

இயற்பாவின் மூன்றாம் திருவந்தாதியில் வருகிறது இந்த வெண்பா:-

*நிறம் வெளிது, செய்து, பசிது, கரிது என்று*
*இறை உருவம் யாம் அறியோம், எண்ணில்-நிறைவுஉடைய*
*நா-மங்கை தானும் நலம் புகழ வல்லளே*
*பூ மங்கை கேள்வன் பொலிவு?*

(வெளிது-வெள்ளை, பசிது-பச்சை, செய்து-சிவப்பானது, கரிது-கறுப்பானது, நாமங்கை-சரஸ்வதி, பூமங்கை-லக்ஷ்மி, கேள்வன்-கணவன், பொலிவு-உருவம், அழகு)

இறைவன் வெளுப்பா சிவப்பா பச்சையா கறுப்பா என்று அவன் உருவத்தை என் போன்றவர்களால் சொல்லமுடியாது. எண்ணிப் பார்த்தால் கல்வி அறிவு நிறைந்த சரஸ்வதிதான் லட்சுமி மணாளனின் உருவத்தை வருணிக்க வல்லவள்.

பிரம்மனின் நாக்கில் சரஸ்வதி உறைவதாக சொல்வார்கள். அதனால் அவள் நாமங்கை. தாமரைப்பூவில் பிறந்தவள் என்று லக்ஷ்மியை சொல்வார்கள். அதனால் அவள் பூ மங்கை. இந்தப் பாடலில் சரஸ்வதி கல்வியின், அறிவின் தீட்சண்யத்தின் குறியீடு. இறைவனை இத்திறத்தவன் என்று சொல்லுவதற்கே சரஸ்வதியின் அறிவு முதிர்ச்சி வேண்டும். இறைவன் கறுப்பா சிவப்பா என்கிற கேள்விக்கெல்லாம் அவளால்தான் பதில் சொல்ல முடியும் என்கிறார் பேயாழ்வார்.

அவளைக் கேட்டால் இந்தக் கேள்வியெல்லாம் அர்த்தமற்றது என்று சொல்லலாம்.

இறைவன் உருவமுள்ளவனா அற்றவனா என்ற கேள்வியை எல்லா நம்பிக்கைகளும் கேட்டு விடைதர முயல்கின்றன. திருக்குரான் - "In the name of God, the Merciful, the Compassionate. Say (O Muhammad) He is God the One God, the Everlasting Refuge, who has not begotten, nor has been begotten, and equal to Him is not anyone." என்கிறது.

திருமங்கையாழ்வார் பின்உருவாய் முன்உருவில் பிணிமூப் பில்லாப் பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணாதவன் என்று இறைவனை வர்ணிக்கும்போது ஏறக்குறைய இதே கருத்து வெளிப் படுகிறது. நம்மாழ்வார் ஏக மூர்த்தி இரண்டு மூர்த்தி மூன்று மூர்த்தி பலமூர்த்தி என்பதுடன் உருவங்களுடன் அருவும் ஆகி என்று சூட்சும வடிவத்தையும் விட்டு வைக்கவில்லை.

வடிவமோ வடிவமற்றதோ நம்பினால் சரி!



# 27. வதரி வணங்குவோம்

**ப**த்ரிகாசிரமத்துக்குப் போவது இப்போதெல்லாம் ரொம்ப சுலபம். உங்கள் ஊரிலிருந்தே பிரயாணத் தரகர்களிடம் சொல்லி வைத்தால் ரயில் டிக்கெட், வசதியுள்ள பஸ், கூடவே சமையற் காரர்கள் வேளாவேளைக்கு காபி, டிபன் சாப்பாடுடன் அழைத்துச் சென்று நாராயணனை தரிசனம் செய்வித்து அலகாந்தா நதியில் நீராடவைத்து நீத்தாருக்கும் சேர்த்து புண்ணியம் சேகரித்து வர ஏற்பாடு செய்வார்கள். திருமங்கை ஆழ்வார் காலத்தில் பத்ரி காசிரமம் செல்வது அத்தனை சுலபமாயிருக்கவில்லை. காட்டுப் பாதை, நல்ல ரோடு கிடையாது. மிருகங்களின் மிரட்டல், குளிர். இதனால் சின்ன வயசிலேயே உடம்பில் தெம்பு இருக்கும்போதே சென்று வணங்குவோம் என்று பாடியிருக்கிறார். பெரிய திரு மொழியில் முற்ற மூத்துக்கோல் என்ற பத்து பாசுரங்களில் வயசாவதன் அறிகுறிகளை அத்தனை நுட்பமாக விவரித்துள்ளார்.

*முற்ற மூத்து, கோல் துணையா,*
*முன்னடி நோக்கி வளைந்து,*
*இற்றகால் போல், தள்ளி, மெள்ள*
*இருந்து அங்கு இளையாமுன்,*
*பெற்ற தாய் போல் வந்த பேய்ச்சி*
*பெரு முலை ஊடு, உயிரை*
*வற்ற வாங்கி உண்ட வாயான்*
*வதரி வணங்குதுமே.*

வயசு முற்றிப்போய், கம்பைத் துணையாகக் கொண்டு முன் நோக்கி வளைந்து கால் இற்றுப்போனது போல தள்ளி மெள்ள அங்கங்கே உட்கார்ந்து இளைப்பாறுமுன்னே... பத்ரிகாசிரமம் சென்று வணங்குவோம்! அடுத்த பாட்டில், முதுகைப் பிடித்துக் கொண்டு முன்னால் கோல் ஊன்றி, விதிர் விதிர்த்து (நடுங்கி) கண் சுழன்று மேல்மூச்சு வாங்கி இருமி... இப்படி முதுமையின் கொடுமைகளை அழுத்தமாகச் சொல்வதற்கு முக்கியக் காரணம் தாமதிக்காதீர்கள்! இளம்வயதிலேயே போய் தரிசித்துவிடுங்கள் என்பதை உணரவைப்பதே. பயப்படாதீர்கள். இப்போது எந்த வயசிலும் செல்லலாம். நான் ஐம்பது வயசானப்புறம்தான் சென்றேன். டில்லியிலிருந்து எங்களை அழைத்துச் சென்ற டூரிஸ்ட் கார் டிரைவரின் பெயர் நாராயண் சிங்.

## 28. திவ்யப் பிரபந்தமும் திருக்குறளும்

திவ்யப் பிரபந்தத்தில் சில பாடல்களில் திருக்குறளின் வரிகள் பயன்பட்டிருக்கின்றன. சில அப்படியே, சில வேறு அர்த்தத்தில். இதைப் பற்றி ஆராய்ச்சியே செய்யலாம்.

திருமழிசை ஆழ்வாரின் நான்முகன் திருவந்தாதியில் 23ஆம் பாடல் இது.

> ***வித்தும் இடவேண்டும் கொல்லோ விடை அடர்த்த***
> ***பத்தி உழவன் பழம்-புனத்து?-- மொய்த்து எழுந்த***
> ***கார் மேகம் அன்ன கரு மால் திருமேனி***
> ***நீர் வானம் காட்டும், நிகழ்ந்து.***

(விடை அடர்த்த - எருதுகளைக் கொன்ற, மொய்த்தெழுந்த - திரண்டு வந்த)

இதில் திருக்குறள் 87ஐ வேறுவிதமாகப் பயன்படுத்தியிருக் கிறார். 'விருந்தோம்பல்' என்ற அதிகாரத்தில்...

> ***வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி***
> ***மிச்சில் மிசைவான் புலம்***

எனும் குறளின் பொருள்.

விருந்தாளிகளுக்கு கொடுத்து மிச்சத்தை உண்பவன் தன் நிலத்தில் விதை போடக்கூட தேவையில்லை என்று விருந்தினரைப் போற்றுதலை அழுத்தமாகச் சொல்வதற்குப் பயன்படுத்தினார்.

ஆழ்வார் இந்தக் குறளை வேறு பரிமாணத்திற்கு எடுத்துச் சென்றிருக்கிறார். 'பக்தி உழவனான பகவானின் நிலத்தில் நாம் ஒரு விதையும் விதைக்கவேண்டாம். அவனே கவனித்துக் கொள்வான்' என்கிறார். வைணவ மரபின் அடிநாதம் இது. நாம் எதுவுமே செய்யவேண்டியதில்லை. அவனை நம்பினால் மட்டும் போதும். மிச்சத்தை அவன் பார்த்துக்கொள்வான். இந்தப் பாட்டில் இரண்டாம் பாதியில் மழைதிரண்டு வரும் நீலவானம் மேக வண்ணனான திருமாலைக் காட்டுகிறது ஆழ்வாருக்கு.

'வினை விதைத்தவன் வினை அறுப்பான்' என்கிற பழ மொழியின் பயப்படுத்தாத வடிவம் இந்தப் பாடல்.

# 29. இந்த வலையில் சிக்கலாம்

ஆண்டாள் பாசுரங்கள் ஒவ்வொன்றிலும் அழகான தமிழ்ச் சொற்கள் கிடைக்கும். அதற்காகவாவது அதன் பக்தியைக்கூட புறக்கணித்துவிட்டு ரசிப்பவர்கள் இருக்கிறார்கள். தமிழால் முதலில் தனக்குள் அந்தப் பாடல் உங்களை இழுக்கும், உள்ளே நுழைந்துவிட்டால் போதும். அதனுள் பக்தி என்கிற வலை விரித்துக் காத்திருக்கும். அதன் சுழற்சியிலிருநது தப்ப முடியாது என்கிறார் கோதை.

பட்டாம்பூச்சி, வண்ணத்துப்பூச்சி என்றெல்லாம் இன்று சொல்லப்படும் ஜந்துவுக்கு ஆண்டாளின் காலத்தில் இந்திர கோபம் என்று பெயர். இது எப்படி என்று யோசிக்க வைக்கிறது. ஒருவேளை இந்திரனின் கோபத்தின் வண்ணமோ? திருமாலிருஞ் சோலையில் ஆண்டாள் பார்த்த பட்டாம்பூச்சிகள் அத்தனையும் சிவப்பு. ஒரே சமயத்தில் சோலை முழுவதும் குப்பென்று எழுந்து பரந்து பறந்து செல்கின்றன. நாச்சியார் திருமொழியின் இந்தப் பாடலைப் பாருங்கள்.

*சிந்தூரச் செம்பொடிப் போல் திருமாலிருஞ்சோலை எங்கும்*
*இந்திர கோபங்களே எழுந்தும் பரந்திட்டனவால்,*
*மந்தரம் நாட்டி அன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட*
*சுந்தரத்தோளுடையான் சுழலையினின்று உய்துங் கொலோ?*

(இந்திரகோபம் - பட்டுப்பூச்சி; மந்தரம் - பாற்கடலைக் கடைந்த மந்தர மலை; சுழலை - விரித்த வலை; உய்துகொலோ - தப்பிக்கவும் முடியாமல்)

சிவப்பான பொடி இரைத்ததுபோல திருமாலிருஞ் சோலையெங்கும் பட்டுப்பூச்சிகள் பறந்து விரிந்தன. அன்று மந்தர மலையை மத்தாக வைத்துப் பாற்கடலைக் கடைந்து இனிப்பான அமுதம் எடுத்த அழகான தோள் கொண்டவன் விரித்த வலையிலிருந்து தப்பிக்க முடியுமா? தின வாழ்வில் காதல், பாசம், சம்சாரம், பதவி, மோகம் துவங்கி இண்டர்நெட்வரை எத்தனையோ விரித்த வலைகள் காத்திருக்கின்றன. கடைசியில் திருமாலின் வலையில் வந்து விழுந்தால் சரி.

# 30. எனதுயிர் உனது

'ஆவி' என்ற சொல் அன்றாட வழக்கில் உள்ளது. நீராவி, ஆவி பிடிக்கிறது, உயிர், மூச்சு போன்ற பிரயோகங்கள்தான் அதிகம். நம்மாழ்வாரின் 'ஆவி' சற்று வேறுபட்டது. அவரது ஆவி ஆத்மா

ஆத்மா என்பது ஜீவனிலிருந்து வேறுபட்டது. நம் எல்லோரிடமும் இருக்கும் ஒரு சாஸ்வதம், ஒரு கடவுள் அம்சம் ஆத்மா. 'ஆவிசேர் உயிரினுள்ளால' என்று நாம் முன்பு குறிப்பிட்ட பாடலில் ஆவி என்பது ஆத்மா. உயிர் என்பது பரமாத்மா. இரண்டிற்கும் உள்ள தொடர்பு என்ன? இதற்கு திருவாய்மொழியில் பதிலளிக்க முயற்சிக்கிறார்.

*என்னது ஆவி மேலையாய்!*
*ஏர் கொள் ஏழ் உலகமும்,*
*துன்னி முற்றும் ஆகி நின்ற*
*சோதி ஞான மூர்த்தியாய்!*
*உன்னது என்னது ஆவியும்;*
*என்னது உன்னது ஆவியும்;*
*இன்ன வண்ணமே நின்றாய்*
*என்று உரைக்க வல்லேனே?*

*(துன்னி-நெருங்கி)*

என்னுடைய ஆத்மாவைப் பெற்று ஏழு உலகங்களையும் நெருங்கி வியாபித்து முழுவதும் ஒளியாய், ஞான வடிவமாய் நிற்கிறாய். உன் ஆத்மா என்னுடையதாயும் என் ஆத்மா உன்னுடையது என்று என்னால் சொல்ல முடியுமா?

இவ்வாறு கேட்டுவிட்டு அடுத்த பாட்டில் 'உரைக்க வல்லேன் அல்லேன்'. என்னால் உன் முடிவில்லாத கீர்த்தி வெள்ளத்தின் கரைக்கு என்று செல்வேன்? என்கிறார்.

ஆழ்வார் இறைவனைத் தம் உயிராகக் கருதித் தம்மை இறைவன் வசமாக்கினார். விசிஷ்டாத்வைதக் கருத்துகளில் முக்கியமானது ஒன்று இந்தக் கருத்து. பிரிவின்றி பிரபஞ்சமெங்கும் பரவியிருக்கும் ஆத்மாவும் நம்முள்ளே இருக்கும் ஆத்மாவும் வேறு வேறல்ல. நம்முள் இருக்கும் ஆத்மா அந்த ஆத்மாவுடன் சேர்ந்துகொள்ளவே விரும்புகிறது. அதுதான் முக்தி நிலை.

யாருமே சாவதில்லை. இரண்டற இறைவனுடன் கலந்து விடுகிறோம்.



# 31. குப்பாயம்

சில பேருடைய பார்வை அப்படி. ஒரு தடவை பார்த்தால் போதும். நம்மை ஒரு மானசீகக் கயிறு போட்டு இழுத்துவிடும். அந்தப் பார்வைக்கு மயங்கி பார்த்தவர் பின்னால் கட்டுண்டது போல் செல்லத் தூண்டும். கண்ணனின் பார்வை அந்த வகை.

திவ்யப் பிரபந்தத்தில் எந்தப் பாடலை எடுத்துக் கொண்டாலும் அதில் ஒரு புதிய சொல்லைக் கற்றுக் கொள்ளலாம். குப்பாயம் என்றால் சட்டை. திருவரங்கத்தில் மார்கழி மாதம் முத்தங்கி, ரத்னங்கி என்று இரண்டு சேவைகள் உண்டு. முத்தாலே செய்த அங்கியை அணிந்து ஆண்டுக்கு ஒருமுறை கிடைக்கும் அரிய தரிசனம் 'கடல் நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலுமா கண்டு உடல் எனக்கு உருகும்' என்று தொண்டரடிப்பொடி யாழ்வார் இதைப் பார்த்து உருகியிருக்கிறார். ஆணடாளுக்கு எல்லாமே கண்ணன்தான். கண்ணன் முத்துப் பதித்த சட்டை அணிந்து ஒரு யானைக்குட்டி போல வேர்க்க விறுவிறுக்க விளையாடும் காட்சியை பார்த்ததாக ஆண்டாள் சொல்கிறாள்.

*கார்த்தண் கமலக் கண் என்னும்*
*நெடுங் கயிறு படுத்தி என்னை*
*ஈர்த்துக் கொண்டு விளையாடும்*
*ஈசன் தன்னைக் கண்டீரோ?*
*போர்த்த முத்தின் குப்பாயப்*
*புகர்மால் யானைக் கன்றேபோல்*
*வேர்த்து நின்று விளையாட*
*விருந்தாவனத்தே கண்டோமே.*

*(கார்த்தண்-மேகம் போல குளிர்ந்த, குப்பாயம்-சட்டை, புகர்மால் யானை-புள்ளிகளுடைய யானை.)*

குளிர்மேகம் போன்ற, தாமரைபோன்ற கண்கள் என்னும் கயிற்றால் என்னை இழுத்துக் கொண்ட திருமாலைப் பார்த்தீர் களா? முத்துச் சட்டை போர்த்தி குட்டி யானைபோல வேர்த்து விளையாடுவதை பிருந்தாவனத்தில் நாங்கள் எல்லாம் பார்த் தோமே.

ஆண்டாளது அபாரக் கற்பனைத் திறன் பிருந்தாவனத்தை நூற்றாண்டுகள் கடந்து கண்ணனின் விளையாட்டும் வேர்வையு மாக நம் கண் முன்னே நிறுத்த வல்லது.



# 32. அரக்கு முத்திரையின் மற்றோர் உபயோகம்

ஒரு பாவச் செயலை இனிமேல் செய்யமாட்டேன் என்ற தீர்மானத்தையோ வைராக்கியத்தையோ வலியுறுத்த நாம் என்னவெல்லாம் செய்கிறோம். கைப்பட எழுதிக்கொடுக்கிறோம். துண்டு போட்டு மிதிக்கிறோம். சூடம் கொளுத்தி அணைக்கிறோம் அல்லது ஸ்டாம்பு பேப்பரில் எழுதி கையெழுத்து போட்டுக் கொடுக்கிறோம். திருச்சந்தவிருத்தத்தில் ஆழ்வார் ஒருபடி மேலே செல்கிறார். புலன்களால் (இந்திரியங்களால் வரும் தொந்தரவு அவரை ரொம்ப இம்சை செய்கிறது. அவற்றுக்கு ஒன்பது வாசல்கள் உள்ளன. இவற்றையெல்லாம் முதலில் அடைத்துவிடவேண்டும் என்கிறார். அதுவும் எப்படி? அரக்கு முத்திரை 'இலச்சினை' செய்து இந்த வாசல்களை அடைத்துவிட்டால்தான் பகவானை அடையும் நல்லவழிகளைத் திறக்கமுடியும். அப்போதுதான் சுடர் போல ஞானம் பிறக்கும். சாப்பாட்டை குறைத்து உடலை எலும்பு தெரியும்படியாக குறைத்து உள்ளே பக்குவப்பட்டு நெஞ்சம் உருகி அன்பினால் மட்டும்தான் சக்கரபாணியான திருமாலை பார்க்க முடியும்' என்கிறார். பாடலைப் பார்ப்போம்.

*புன்புல வழிஅடைத்து அரக்கு [இ]லச்சினை செய்து*<br>*நன்புல வழிதிறந்து ஞானநற் சுடர்கொளீஇ*<br>*என்பில் எள்கி நெஞ்சு [உ]ருகி உள்கனிந்தெழுந்ததோர்*<br>*அன்பில் அன்றி ஆழியானை யாவர்காண வல்லரே?*

*(புன்புல-அற்பமான இன்பங்களின் வழி, நன்புல-நல்லவழி, எள்கி-குறைந்து, ஆழி-சக்கரம்.)*

தை மாதம் மக நட்சத்திரத்தில் திருமழிசையில் பிறந்த ஆழ்வாரைப் பற்றி பல கதைகள் உள்ளன. மற்ற சமயங்களை ஆராய்ந்து விட்டு வைணவத்துக்கு வந்தவர் என்பது இவரது பாடல்களிலேயே

தெரிகிறது. 'குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்' என்று அவரே சொல்லிக் கொள்கிறார். சிவவாக்கியரும் இவரும் ஒருவரே என்று சொல்பவரும் உண்டு.

திருமழிசையில் உள்ள சந்நிதியில் ஆழ்வாரின் கால்கட்டை விரலில் ஒரு கண் இருக்கும். இதை பற்றி பல சுவாரசியமான கதைகள் உண்டு. சொன்னால் சைவர்கள் கோபித்துக் கொள் வார்கள். 'பேணிலும் வரந்தர மிடுக்கிலாத' தேவர்களால் 'பிறப் பென்னும் பிணக்கை அறுக்கமுடியாது' என்கிறார்.



# 33. உங்கள் ஆதிசேஷன் யார்?

மல்ட்டிபர்ப்பஸ் என்ற வார்த்தைக்கு 'பல்பயன்' அல்லது 'பல்திறன்' என்று தமிழில் சொல்லலாம். மகாவிஷ்ணுவுக்கு அனந்தாழ்வான் என்று சொல்லப்படும் ஆதிசேஷன் ஒரு மல்ட்டி பர்ப்பஸ் தொண்டர். இராமாயணத்தில் லக்ஷ்மணன் 'ராமனுக்கு நான் எல்லாம் செய்வேன்' என்று சொன்னது மட்டுமன்றி புது மனைவியைப் பிரிந்து, கூடவே காட்டுக்கு வந்து, காவல் காத்து, சீதையிடம் திட்டு வாங்கி, காடெல்லாம் அலைந்து தேடி, சண்டை போட்டு, அசுரனின் அம்பில் ஏறக்குறைய இறந்து... லக்ஷ்மணனின் சேவையை நாம் எளிதில் மறக்கமுடியாது.

லக்ஷ்மணனை ஆதிசேஷனின் அம்சம் என்றுகூட சொல்லு வார்கள். இந்த சினேகிதப் பாம்பு திருமாலுக்கு என்னவெல்லாம் செய்கிறது. அவர் நடந்து செல்லும்போது குடையாகிறது. உட்காரும்போது சிம்மாசனமாகிறது, சும்மா நின்றால் கால் செருப்பாகிறது. அவர் பாற்கடலில் துயில்கொள்ளும்போது சொகுசாக மிதக்கும் தெப்பமாகிறது. இரவில் அதன் கண்கள் ரத்தினம்போல் ஒளிர்ந்து வெளிச்சம் காட்டுகின்றன. அதனை பட்டாடை போல போர்த்திக் கொள்ளவும் அனுமதிக்கிறது. தலையணையாகவும் கட்டிக்கொள்ளலாம்.

*சென்றால் குடையாம் இருந்தால்சிங் காசனமாம்*
*நின்றால் மரவடியாம் நீள்கடலுள்--என்றும்*
*புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்*
*அணையாம் திருமாற்[கு] அரவு.*

(புணை-தெப்பம், புல்கும்-அணைத்துக் கொள்ளும்)

பொய்கையாழ்வாரின் முதல் திருவந்தாதியில் உள்ளது இந்த வெண்பா. இதைத் தொடர்ந்து பிற்காலத்தில் 'கணிகண்ணன் போகின்றான்' என்று துவங்கும் இரண்டு தனிப் பாடல்கள். ஆழ்வார் ஆணைப்படி பெருமாள் படுத்திருந்தவர் எழுந்து வந்துவிட்டார் என்றெல்லாம் சுவாரஸ்யமான கதைகள் உள்ளன.

உலகின் பெரிய மனிதர்கள் ஒவ்வொருவருக்கும் இம்மாதிரி ஓசைப்படாமல் எல்லா கைங்கர்யங்களும் செய்பவர்கள் இருப் பார்கள்- அவர்களைப் பெரும்பாலும் மறந்து விடுகிறோம். பொதுவாக ஆதிசேஷன் என்று அவர்களை அழைக்கலாமா?

## 34. ஏழாம் நூற்றாண்டின் சப்தங்கள்

**கா**லையில் என்னை எழுப்புவது முதல் காகங்கள், ஒற்றைக் குயில், சிங்கப்பூரிலிருந்து வந்து தாழ்வாகப் பறந்து மீனம்பாக் கத்தில் தரையிறங்கும் விமான சப்தம், ஸ்டேட் பாங்க் காலனியில் கறிகாய் விற்பவரின் சப்தம், பிள்ளைகளைப் பள்ளிக்கு அழைக்க அவசரப்படுத்தும் வேனின் ஹாரன் ஒலி, தரையடித் தண்ணீரை உறிஞ்ச மோட்டார் போட்ட சப்தம். இதெல்லாம் 2007இன் அதிகாலை சப்தங்கள்.

தொண்டரடிப் பொடி ஆழ்வார் காலத்தில் திருவரங்கத்தில் அதிகாலை சப்தங்கள் வேறு. காலை வேளையில் ஆழ்வாருக்கு முதல் வேலை உறங்கிக் கொண்டிருக்கும் அரங்கனை எழுப்புவது.

> *கதிரவன் குணதிசைச் சிகரம் வந்து அணைந்தான்;*
> *கன இருள் அகன்றது காலை அம் பொழுதாய்;*
> *மது விரிந்து ஒழுகின மா மலர் எல்லாம்;*
> *வானவர் அரசர்கள் வந்து வந்து ஈண்டி,*
> *எதிர்திசை நிறைந்தனர்; இவரொடும் புகுந்த*
> *இருங் களிற்று ஈட்டமும் பிடியொடு முரசும்*
> *அதிர்தலில் அலைகடல் போன்றுளது எங்கும்;*
> *அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே.*

(அணைந்தான்-அடைந்தான்; ஈண்டி-திரண்டு; ஈட்டம்-கூட்டம்)

அதிகாலை, சூரியன் கிழக்கே சிகரத்தை அணுகிவிட்டான். இருள் நீங்கியது. பூக்கள் எல்லாம் தேன் சொரிந்தன. தேவலோகத்து மன்னர்கள் ஒவ்வொருவராக நெருங்கி வந்து நிற்கிறார்கள். இவர்களோடு புகுந்த யானைக் கூட்டமும் அதிரும் முரசங்களும் அலைகடல் போல ஒலிக்கின்றன. 'அரங்கநாதனே படுக்கையி லிருந்து எழுந்து எங்களுக்கு அருள்வாய்'. இது ஏழாம் நூற்றாண் டில். இன்றைய தின நாராசங்களில் அரங்கன் உறங்க மாட்டார் என்றுதான் தோன்றுகிறது.

## 35. எங்கே போனாள்?

இந்தக் காலத்து இளம் பெண்கள் நேரத்தில் வீட்டுக்கு வரவில்லை என்றால் தாய்மார்கள் என்னவெல்லாம் கவலைப் படுவார்கள். பஸ் கிடைக்கவில்லையோ, பர்ஸைத் தொலைத்து விட்டாளோ! அல்லது எதிர்வீட்டுப் பையன் ஒருத்தன் இங்கேயே பார்த்துக் கொண்டிருப்பானே அவன் புதிதாக ஸ்கூட்டர் வாங்கி யிருக்கிறான், அழைத்துச் சென்றுவிட்டானோ. இவள் வீட்டுக்கு வருவதற்குள் எத்தனை மன உளைச்சல்... இந்தக் காலத்து அன்னையரின் கவலைகள் இவை. கண்ணன் வாழ்ந்த அந்தக் காலத்தில் மதுராபுரியில் அன்னையரின் கவலைகள் வேறுவித மானவை. பெரியாழ்வாரைக் கேட்டால் சொல்வார்.

ஒரு தாய் தன் மகளைத் தேடுகிறாள். இந்தப் பெண் எங்கே போய்த் தொலைந்தாள். வீடே வெறிச்சென்றிருக்கிறதே. எல்லாக் கதவுகளையும் திறந்து போட்டுவிட்டு எங்கே போனாளோ? யார் பின்னே சென்றாளோ! அப்படி தன்னை அறியாமல் பின்னே செல்லும்படி இவளைக் கவர யாரால் முடியும்? மல்லர்களோடு ஒரு குழந்தை சண்டைபோட்டு ஜெயித்ததாக மதுராபுரியில் பேசிக் கொள்கிறார்களே. அந்தக் குழந்தையைத் தேடி அங்கேதான் போயிருக்கவேண்டும்.

*நல்லது ஓர் தாமரைப்பொய்கை*
*நாண் மலர் மேல் பனி சோர,*
*அல்லியும் தாதும் உதிர்ந்திட்டு,*
*அழகழிந்தால் ஒத்ததாலோ!*
*இல்லம் வெறியோடிற்றாலோ!*
*என் மகளை எங்கும் காணேன்;*
*மல்லரை அட்டவன் பின் போய்*
*மதுரைப் புறம் புக்காள் கொல்லோ?*

*(தாது-உள்ளிதழ், மொட்டு, அட்டவன்-வென்றவன்.)*

தாமரைப் பொய்கையில் மலர்களின் மேல் பனி படர்ந்து அல்லி மலரும் மொட்டுக்களும் உதிர்ந்து அழகிழந்ததுபோல வீடு வெறிச் சோடிப் போயிற்று. என் மகளை எங்கும் காணவில்லை. மல்லர் களை ஜெயித்தவன் பின்தொடர்ந்து மதுரைக்குப் போய்விட் டாளோ!

பெரியாழ்வார் தன் மகள் ஆண்டாளை நினைத்துக்கூட இந்தப் பாடலைப் பாடியிருக்கலாம்.



## 36. எப்படியும் தொழலாம்

திருமாலை எதுவரை தொழவேண்டும், எப்படித் தொழ வேண்டும் என்கிற இரண்டு கேள்விகளுக்கும் ஒரே வெண்பாவில் விடை தருகிறார் பொய்கை ஆழ்வார்.

முதல் திருவந்தாதியில் 70ஆம் பாடலில்...

எதுவரை தொழவேண்டும் உடம்பு விழும் வரை! எப்படித் தொழவேண்டும் மலர்மாலையால் தொழலாம், யாகம் செய்ய லாம், மந்திரங்களைச் சொல்லலாம். ஏன் தந்திரங்கள் கூடச் செய்து தொழலாம். அவன் பெயரைச் சொன்னால் மட்டும் போதும். உங்களுக்கு நல்லது நிகழும்.

*சொல்லும் தனையும் தொழுமின் விழும்உடம்பு*
*செல்லுந்தனையும் திருமாலை-நல் இதழ்த்*
*தாமத்தால் வேள்வியால் தந்திரத்தால் மந்திரத்தால்*
*நாமத்தால் ஏத்துதிரேல் நன்று.*

*(சொல்லும் தனையும்-சொல்ல முடிந்தவரை, செல்லுந்தனையும் -இறக்கும்வரை, தாமம்-மாலை, வேள்வி-யாகம், ஏத்துதிரேல்-வாழ்த்தினால்.)*

திருமங்கை ஆழ்வார், 'வயசாவதற்குள் ஒரு நடை பத்ரிகாசிரமம் போய் வணங்கி வந்துவிடுங்கள்' என்றார். இவர் 'அப்படிச் செல்ல முடியாவிட்டாலும் முடிந்ததைச் செய்யுங்கள்' என்கிறார்.

முதியவர் ஒருவரை அடிக்கடி நான் மெரீனா கடற்கரையில் நடக்கும்போது சந்திப்பேன். அவருடன் அதிகம் பேசமுடியாது. காது கொஞ்சம் மந்தம். 'எப்படி இருக்கிறீர்கள்?' என்று விசாரிப்பார் 'மூன்று நாளாக ஜுரம் இன்றுதான் தேவலை' என்றால் 'அப்படியா ரொம்ப சந்தோஷம்' என்பார் , ஏழைகளுக்கு ரொட்டி தருவார், டீ வாங்கித் தருவார், ஒருசில பிச்சைக்காரர்களுக்கு சில்லறை தருவார். மற்ற சமயங்களில் நாராயண, நாராயண என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே இருப்பார். அவர் பேயாழ்வாரின் இந்தப் பாசுரத்தைத்தான் கடைப்பிடிக்கிறார். ஆனால் அதை படித்திருப்பார் என்று தோன்றவில்லை; சிந்திக்காரர்.

## 37. மிகக் கடினம்

'கோணை' என்ற ஒரு சொல்லுக்கு பொருள் என்ன என்று சமீபத்தில் பார்க்க வேண்டியிருந்தது. கோணை என்றால் crookedness, வளைவு. கோணைக் கத்தி, கோணைக் கழுத்தன், கோணைப் பேச்சு, கோணை வாயன்... போன்ற பிரயோகங்களில் இந்தச் சொல் பயன்படுகிறது. திவ்யப் பிரபந்த காலத்தில் அதற்கு மிறுக்கு, பிரயாஸம், அனுபத்தி போன்ற அர்த்தங்கள் இருந்தது. ஸம்ஸாரிகளின் கோணைப் போக்கி என்று ஒரு வியாக்கியானம் உள்ளது. Difficulty-கஷ்டம் என்ற அர்த்தத்தில் நம்மாழ்வார் திருவாய்மொழியில் திருமாலை வர்ணிக்க முயலும்போது இந்தச் சொல்லைப் பயன்படுத்துகிறார்.

*ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன்*
*காணலும் ஆகான் உளனல்லன் இல்லையல்லன்*
*பேணுங்காற் பேணும் உருவாகும் அல்லனுமாம்*
*கோணை பெரிதுடைத்து எம் பெம்மானைக் கூறுதலே.*

*(அல்லா-பயனல்லாத, பேணுங்கால்-விரும்பும்போது.)*

உலகத்தில் நாம் பார்க்கிற ஆண்களைப்போல் அல்லன், அவன். பெண்களைப்போலவோ உதவாத அலியோ அல்லன் அவன். அவனைக் கண்ணால் பார்க்க முடியாது. இருப்பவனில்லை; இல்லையும் இல்லை. வேண்டும்போது வேண்டும் உருவில் தோன்றுவான்; தோன்றமாட்டான்.

என் பெருமானைக் கூறுவது ரொம்ப கஷ்டமாக இருக்கிறது.

உலகின் சிறந்த கவிஞர்களில் ஒருவரும் பிரபந்தத்தில் திருவாய் மொழி மூலம் வேதத்தின் சாரத்தைக் கொண்டு வந்த நம்மாழ்வாரே திருமாலை இன்னவன் என்று கூறுவதற்கு எவ்வளவு கஷ்டப் படுகிறார் எப்படி சொல்வது என்று தெரியவில்லை 'கூவும் ஆறு அறிய மாட்டேன்' என்கிறார் பாருங்கள்.

நம்மால் முடியுமா? வார்த்தைகளால் அவனைச் சிறைப்பிடிக்க முடியாது.

## 38. எட்டாம் நூற்றாண்டில் சர்ஜரி

நம் பழைய நூல்களில் மருத்துவக் குறிப்புகள் பல இருப்பதாகச் சொல்கிறார்கள். இரண்டாம் நூற்றாண்டில் சுஸ்ருதர் எழுதிய நூல்களில் முதல் பிளாஸ்டிக் சர்ஜரி போன்ற அறுவை சிகிச்சைகள் பற்றிய குறிப்புகள் உள்ளனவாம். தமிழிலக்கியத்தில் எனக்குத் தெரிந்தவரை முதல் அறுவைசிகிச்சை பற்றி குறிப்பிட்டவர் குலசேகர ஆழ்வார்.

இவர் எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த சேரமன்னர். இன்றைய கொல்லம் நகரம் அன்று கொல்லி என்று அழைக்கப்பட்டது. அதைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சேரமன்னர் திட விரதனின் மகன் குலசேகரர். பட்டத்திற்கு வந்து மெல்ல மெல்ல அரசியல் நாட்டம் குறைந்து திருமாலின்பால் ஈர்க்கப்பட்டார் குலசேகரர். அதற்குச் சாட்சியாக இருப்பது இவரது 'பெருமாள் திருமொழி'யின் 105 பாடல்களே.

இவற்றில் ஒன்றில்தான் இந்த சர்ஜரிக் குறிப்பு உள்ளது.

*வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்*
*மாளாத காதல் நோயாளன் போல், மாயத்தால்*
*மீளாத் துயர் தரினும் வித்துவக்கோட்டு அம்மா! நீ,*
*ஆளா உனது அருளே பார்ப்பன் அடியேனே.*

(மாயத்தால் - விளையாட்டாக, ஆளா- அடிமை செய்வதற்கு)

ஒரு மருத்துவன் கத்தியால் அறுத்து வடு போட்டாலும் அவன் அதை நோயாளியின் உயிரைக் காப்பாற்றும் நோக்கத்தில் செய்வ தால் மருத்துவன்மேல் நீங்காத அன்பு ஏற்படுகிறது. அதுபோல் விளையாட்டுப்போல் நீ எனக்கு விடாத துன்பம் தந்தாலும் உனக்கு அடிமைசெய்ய உன் அருளையே எதிர்பார்த்துக் காத் திருப்பேன் என்று வித்துவக்கோட்டில் உள்ள பெருமானிடம் சொல்லுகிறார்.

வித்துவக்கோடு கேரளத்தில் பட்டாம்பியிலிருந்து ஒரு மைல் தூரத்தில் இருக்கும் உய்ய வந்த பெருமாள் கோயில் என்று சொல்கிறார்கள். இதை இன்று தேடிச் சென்று கண்டுபிடிக்க முடிந்தால் குலசேகரன் என்ற மன்னனையும் இந்த அருமையான பாடலையும் நினைத்துக் கொள்ளலாம்.

வாளால் அறுத்து வடுபோட்டு! அனஸ்தீஸியா வரும்வரை ஜனங்கள் பெருமாளை நினைத்துக் கொண்டுதான் வலியை தாங்கிக் கொண்டிருந்திருக்கிறார்கள்!



## 39. தவறுகள்

செய்த பாவங்களை உணர்ந்து உண்மையாக மன்னிப்புக் கேட்டால் திருமால் நம்மை வந்து ஆட்கொள்வார் என்பது வைணவ நம்பிக்கைகளில் முக்கியமானதொன்று. இதன் நவீன விபரீத விளைவுதான் திருப்பதி போன்ற கோயில்களுக்கு லட்ச லட்சமாக பணமும் தங்கமும் தினம் தினம் வந்து கொட்டுவது. பாவங்கள் செய்துவிட்டு ஒரு நடை திருப்பதிக்குச் சென்றுவிட்டு உண்டியலில் கணிசமான தொகை போட்டுவிட்டு பாவங்களை செய்வதைத் தொடரலாம் என்று பலர் எண்ணுவது.

திருமங்கை ஆழ்வார் 'தாயே தந்தை என்றும்' எனத் துவங்கும் பத்து திருவேங்கடம் சார்ந்த பாசுரங்களில் உண்மையாகவே தன் வாழ்வில் செய்த பாவங்களைப் பட்டியலிட்டு அவற்றுக்கு வருத்தப்பட்டு என்றைக்கு இதை உணர்ந்தேனோ அன்றைக்கே உன்னை வந்தடைந்து விட்டேன். என்னை ஆட்கொள்வாய் என்று உருக்கமாக வேண்டுகிறார்.

திருமங்கை ஆழ்வார் திருநகரிக்குப் பக்கத்தில் சோழ மன்னனுக்கு படைத்தலைவனாக இருந்த கள்ளர் மரபில் பிறந்தார். தினம் அடியார்களுக்கு சோறு போட்டு எல்லாம் இழந்து பெருமாளிடமே வழிப்பறி செய்ய முயன்று ஞானோதயம் பெற்றவர் என்றெல்லாம் கதைகள் உள்ளன.

இந்தப் பத்து பாசுரங்களிலும் திருமங்கை ஆழ்வார் தன் வாழ்வில் செய்த தவறுகளை வெளிப்படையாக ஒப்புக் கொள்கிறார். உதாரணமாக

*கொன்றேன் பல் உயிரைக் குறிக்கோள் ஒன்று இலாமையினால்*
*என்றேனும் இரந்தார்க்கு இனிது ஆக உரைத்து அறியேன் --*
*குன்று ஏய் மேகம் அதிர் குளிர் மா மலை வேங்கடவா! --*
*அன்றே வந்து அடைந்தேன்: அடியேனை ஆட்கொண்டருளே.*

(இரந்தார்க்கு - பிச்சை கேட்டவர்களுக்கு)

எந்தவிதக் காரணமும் இல்லாமல் பல உயிர்களைக் கொன்றேன். என்றைக்காவது பிச்சை கேட்டு வந்தவர்களுக்கு ஓர் இனிய வார்த்தை உண்டா. அதுவும் இல்லை. குன்றில் மேகம் அதிரும் குளிர்ந்த திருமலை வேங்கடவனே! என் தவறை உணர்ந்த உடனே வந்துவிட்டேன். அடியேனை ஆட்கொள்வாய்.

அன்றாட வாழ்க்கையிலும் நம் தப்பை உணர்ந்து ஒப்புக் கொண்டால் மன்னிப்புக் கிடைக்கும் சாத்தியங்கள் அதிகம். உத்தமர்கள் சிலருக்கு திருவேங்கடவனைப்போல தாராள மன சிருக்கலாம்; மன்னித்து விடுவார்கள். முயற்சி செய்து பாருங்கள். குறைந்தபட்சம் உங்கள் குற்றங்களை பட்டியலிடுங்கள்.

தாய், தந்தை, மனைவி, மக்கள் என்றே அலைந்தேன். மான்கண் பெண்களிடம் மயங்கினேன். பல உயிர்களைக் கொன்றேன். தர்மம் செய்யவில்லை. திருமங்கையாழ்வாரின் பாவங்கள் ஏறத் தாழ இன்று பெரும்பாலானோர் செய்யும் பாவங்களே.



# 40. திறம்பாமல்

**வ**ழக்கொழிந்து போன பல அழகான சொற்களை மறுபடி நோக்கி ஒரு லேசான பெருமூச்சு விடுவதற்கான வாய்ப்புகள் ஆழ்வார் பாசுரங்கள் பலவற்றில் உள்ளன.

'திறம்புதல்' என்ற சொல்லைக் கொஞ்சம் கவனிக்கலாம். இதற்கு தப்புதல் என்பது பொருள். இதன் எதிர்ப்பதம் திறம்பாமை. திறம்பாத கடல் என்றால் அலை அடித்து சலிக்காத கடல். திறம்பாத உலகம் - சலியாதிருக்கிற உலகம், திறம்பாது - நான் சொல்வதை என்றால் தப்பாமல், தவறாமல்... இப்படி தீர்மானிக் கப்பட்ட நெறியிலிருந்து தவறாமையைக் குறிக்கும் வார்த்தை இது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் இதனை அத்தனை வேறுபட்ட பொருள்களிலும் ஒரே பாசுரத்தில் பயன்படுத்தியுள்ளார்.

*திறம்பாமல், மண் காக்கின்றேன் யானே என்னும்;*
*திறம்பாமல், மலை எடுத்தேனே என்னும்;*
*திறம்பாமல், அசுரரைக் கொன்றேனே என்னும்;*
*திறம் காட்டி, அன்று ஐவரைக் காத்தேனே என்னும்*
*திறம்பாமல், கடல் கடைந்தேனே என்னும்;*
*திறம்பாத கடல்வண்ணன் ஏறக்கொலோ*
*திறம்பாத உலகத்தீர்க்கு என் சொல்லுகேன் --*
*திறம்பாது என் திரு மகள் எய்தினவே?*

ஒரு தாய் தன் மகள் மேல் கண்ணன் வந்து என்ன என்னவோ பிதற்றுகிறாளே என்று கவலைப்படுவதாக பத்துப் பாடல்களின் வடிவில் ஆழ்வார், பகவத் கீதையின் 18ஆம் அத்தியாயக் கருத்துகள் அத்தனையையும் அழகாகச் சொல்லிவிடுகிறார்.

'இந்தப் பெண் நான் தான் பூமியைத் தவறாமல் காக்கிறேன் என்கிறாள். நான் தான் மலையைத் தூக்கினேன் என்கிறாள். அசுரனைக் கொன்றேன் என்கிறாள். என் திறமையைக் காட்டி

அன்று பாண்டவர்களைக் காப்பாற்றினேன் என்கிறாள். பாற் கடலைக் கடைந்ததும் நான்தான் என்கிறாள். அலை ஓயாத (திறம்பாத) கடல் வண்ணனான திருமால் வந்து புகுந்ததால் இது நிகழ்ந்ததா! தவறு செய்யாத (திறம்பாத) உலகத்தவர்களுக்கு என்ன சொல்வேன். என் மகளுக்கு தப்பாது (திறம்பாது) இது வந்து விட்டதே.

ஏழு முறை இந்தச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார் ஆழ்வார், ஏழு முறையும் திறம்பாமல்.



# 41. என்ன பாட்டு இது?

ஆண்டாளின் நாச்சியார் திருமொழியில் இருக்கும் அந்தரங்க மும் பகவானுடன் சொந்தம் கொண்டாடுவதும் பிரபந்தத்தின் வேறு எந்தப் பகுதியிலும் கிடைக்காது.

குயில்கள் இனிமையாகத்தான் பாடுகின்றன. அதைக் கேட்டு ஆண்டாள் ரசிப்பதில்லை. என்ன பாட்டு இது? எதற்காகப் பாட்டு? திருவேங்கடத்து இறைவன் எனக்கு ஒரு வாழ்வு தந்தால் பாடுங்கள். உங்கள் பாட்டை நான் கேட்பதற்கு அவர் வந்து என்னைச் சேரவேண்டும். அப்போது உங்கள் பாட்டுகளைக் கேட்கிறேன்.

*பாடும் குயில்காள்! ஈது என்ன பாடல்? நல் வேங்கட*
*நாடர் நமக்கு ஒரு வாழ்வு தந்தால் வந்து பாடுமின்;*
*ஆடும் கருளக் கொடி உடையார் வந்து அருள்செய்து*
*கூடுவராயிடில் கூவி நும் பாட்டுகள் கேட்டுமே.*

*(கருளக்கொடி உடையார் - கருடனைக் கொடியாகக் கொண்ட திருமால்)*

ஆண்டாளின் பக்தியின் தீவிரம் அப்படிப்பட்டது. திருமால் வந்து சேரவில்லை என்றால் இயற்கையின் இனிய சப்தங்கள் கூட ரசிப்பதில்லை. காதலர்களையும் புதுசாக கல்யாணம் செய்து கொண்டவர்களையும் கேட்டுப் பாருங்கள். காதலன் வரும்வரை எதுவுமே சிறக்காது, எதுவுமே இனிக்காது. வந்துவிட்டால் பஞ்சு மிட்டாய்க்காரன் மணி கூட இனிமையாக இருக்கும் என்கிறார்கள். ஆண்டாளின் காதல் அப்படி. பூக்கள், தோகை விரிக்கும் மயில்கள், மழை, கடல் அனைத்துமே கோவிந்தன் வந்தால்தான் இனிக்கின்றன. ஆண்டாளின் நாச்சியார் திருமொழி யில் இருக்கும் அந்தரங்கமும் பகவானுடன் சொந்தம் கொண் டாடுவதும் பிரபந்தத்தின் வேறு எந்தப் பகுதியிலும் கிடைக்காது.

# 42. மகாலட்சுமிக்கும் கோபம் வரும்

ஆழ்வார்கள் மிக அரிதாகத்தான் அரசர்களைப் புகழ்வார்கள். அரசர்களுக்கு அரசனாக திருமால் இருக்கும்போது சின்னச் சின்ன மன்னர்களைப் பாடுவது அவர்களுக்கு உவப்பில்லை.

விதிவிலக்காக திருமங்கை ஆழ்வார் தன் பெரிய திருமொழியில் ஒரு சோழ மன்னனின் வெற்றியைப் பாடியிருக்கிறார். விண்ணி என்னும் இடத்தில் நடந்த கடும்போரைக் குறிப்பிட்டு அதில் சோழராஜா வெற்றி கண்ட திருநறையுரை அடைவீர்கள் என்று குறிப்பிடும்போது அரிதாக ஒரு சரித்திரக் குறிப்பு கிடைக்கிறது. இந்த அரசன் யார் என்று அன்பர்கள் ஆராயலாம்.

இந்தப் பாடலின் முதல் பகுதியில் மகா விஷ்ணுவின் உலக ளாவிய வடிவை மிக அழகாக ஆழ்வார் சொல்லும்போது அவர் கற்பனையின் விஸ்தாரம் நமக்கு பிரமிப்பளிக்கிறது.

> பவ்வநீர் உடைஆடை யாகச்சுற்றிப்
> பார்அகலம் திருவடியா பவனம் மெய்யா
> செவ்விமா திரம்எட்டும் தோளா அண்டம்
> திருமுடியா நின்றான்பால் செல்ல கிற்பீர்
> கவ்வைமா களிறு[உ]ந்தி விண்ணி ஏற்றக்
> கழல்மன்னர் மணிமுடிமேல் காகம்ஏற
> தெய்வவாள் வலங்கொண்ட சோழன் சேர்ந்த
> திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே.

(பவ்வம்-கடல், பவனம்-காற்று, மாதிரம்-திசை, கவ்வை-ஆரவாரம்)

கடலை ஆடையாகச் சுற்றி பூமியின் அகலத்திற்கு திருவடிகளும் காற்றை மேனியாகவும் எட்டு திசைகளும் தோளாகவும் அண்ட சராசரம் முழுதும் தலையாகவும் நிற்கின்ற திருமாலினிடத்தில் செல்ல விரும்புபவர்களே! விண்ணி என்ற இடத்தில் ஆரவார

யானைகள் தலையை இடற பகைவரைக் கொன்று மன்னரின் கிரீடங்களின் மேல் காகங்கள் உட்கார வாள் வீசிய சோழ ராஜாவின் திருநறையூருக்குச் சென்று தரிசியுங்கள்.

இந்தத் திருநறையூருக்கு மற்றொரு கதை உண்டு. மகாலட்சுமி ஒருமுறை கோபித்துக்கொண்டு பாற்கடலிலிருந்து புறப்பட்டு இந்த ஊருக்கு வந்து மேதாவி என்கிற மகரிஷியிடத்தில் தங்கிவிட பெருமாள் அவரைத் தேடிக் கொண்டு வந்தாராம்.

மகாலட்சுமிக்கும் பிரச்சினைகள், கோபம் வந்திருக்கிறது.



## 43. அழகான திருமாலை...

தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் இயற்பெயர் விப்ர நாராயணன். இவரது திருமாலை 45 பாடல்களைக் கொண்டு அழகாகக் கட்டப்பட்ட மாலை போன்றது. வைணவத்திற்கு சாதி வேறுபாடுகள் கிடையாது என்கிற கருத்தை ஆழ்வார் பாடல்களில் அடிக்கடி பார்க்கலாம். தொண்டரடிப் பொடியாழ்வார் அந்தணர். திருவரங்கத்துப் பெருமாளுக்கு அழகான திருப்பள்ளி எழுச்சி பாடினவர்.

*பாவியேன் உன்னையல்லால்*
*பாவியேன்!*

உன்னைத் தவிர இந்தப் பாவி வேறு யாரையும் நினைக்க மாட்டேன் என்று பாடும்போது ஆழ்வாருக்கு சந்தேகங்கள் சில வருகின்றன... சில தீர்கின்றன.

நான்கு வேதங்களையும் கற்றுத் தேர்ந்த அந்தணர்களை சதுர் வேதிகள் என்பார்கள். அதை தூய தமிழ்ப்படுத்தும்போது சதுப்பேதிமார்கள் என்று அழைப்பார்கள். அவர்களை அழைத்து, 'இதோ பாரும் குலத்தில் தாழ்ந்தவர்களாக இருந்தாலும் எம் அடியார்கள் என்றால் அவர்களை நீங்கள் வணங்கலாம், கொடுக் கலாம், கொள்ளலாம் என்று சொல்லிவிட்டாயா, அரங்கனே!' என்று வியக்கிறார்.

*பழு[து] இலா ஒழுகல் ஆற்றுப் பலசதுப் பேதிமார்கள்*
*இழிகுலத் தவர்களேலும் எம்மடி யார்கள் ஆகில்*
*தொழுமின்நீர் கொடுமின் கொண்மின் என்றுநின் னோடும் ஒக்க*
*வழிபட அருளி னாய்போல் மதிள்திரு அரங்கத் தானே.*

எந்தச் சாதியாக இருந்தாலும் எம் அடியார்கள் என்றால் அவர்கள் எனக்கு ஒன்றே. அவர்களை நீங்கள் தொழலாம், அவர்களுக்குக் கொடுக்கலாம், அவர்களிடமிருந்து பெறலாம்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட இந்தப் பாடல் சாதி வேறுபாடுகளை தகர்க்கிறது. மறைபொருளாக 'திருப்பாணாழ் வரை உமது தோளில் ஏற்றிக்கொண்டு இங்கு வாரும்' என்று லோகசாரங்க முனிவராகிய அந்தணரை அரங்கநாதன் கட்டளை இட்டது குறிக்கப்படுகிறது என்றும் சொல்கிறார்கள்.



# 44. உலப்பில் கீர்த்தியுள்ள புரைப்பு இலாத பரம்பரன்

உலப்பு என்றால் முடிவு. புரைப்பு என்றால் உவமை, ஒப்பு.

இவ்விரண்டு சொற்களையும் நம்மாழ்வார் திருவாய்மொழியில் நளினமாகப் பயன்படுத்துகிறார்.

*உரைக்க வல்லேன் அல்லேன்; உன்*
*உலப்பு இல் கீர்த்தி வெள்ளத்தின்*
*கரைக்கண் என்று செல்வன், நான்?*
*காதல் மையல் ஏறினேன்;*
*புரைப்பு இலாத பரம்பரனே!*
*பொய் இலாத பரஞ்சுடரே!*
*இரைத்து நல்ல மேன்மக்கள்*
*ஏத்த, யானும் ஏத்தினேன்.*

'என்னால் சொல்ல முடியவில்லை. உன் முடிவில்லாத கீர்த்தி வெள்ளத்தின் எல்லையை என்னால் அடையமுடியும்? உன் மேல் காதல் மயக்கமுற்றேன். ஒப்பில்லாத தெய்வமே! பொய் இல்லாத தெய்வச்சுடரே! தேவர்கள் உன்னைப் புகழ நானும் புகழ்ந்தேன்.

'ஏத்துதல்' என்ற சொல் தோத்திரம் செய்தல் என்ற பொருளில் ஆழ்வார் பலவிதங்களில் பயன்படுத்துகிறார். 'யானும் ஏத்தி ஏழ்உலகும் முற்றும் ஏத்தி பின்னையும் தானும் ஏத்திலும் தன்னை ஏத்த ஏத்த எங்கு எய்தும்...'

உன்னை நானும் புகழ்ந்து உலகம் முழுவதும் புகழ்ந்து அதற்கு மேலும் புகழ்ந்தாலும் உன்னை சுற்றத்தை எப்படி எய்தமுடியும்?

எத்தனை வார்த்தைகளில் எத்தனை பேர் புகழ்ந்தாலும் இந்த உலகமே புகழ்ந்தாலும் அவனுடைய புகழ் கொஞ்சம் மிஞ்சியிருக்கும். உலகின் புகழ் வார்த்தைகள் அத்தனையுமே போதாது.

கடவுளை மனிதனால் முற்றும் புகழ முடிந்தால் அது கடவுள் அல்ல.

# 45. பேய் பிடித்திருக்கிறதா?

**எ**ந்த ஒரு விஷயத்திலும் பைத்தியமாக இருப்பவனை குறிக்க பேயன் என்ற சொல் பழகி வந்தது. பேய் பிடித்தவர்கள்தான் நடு ராத்திரியில் எழுந்து குளிப்பார்கள், சரசரவென்று எழுதுவார்கள்... பௌர்ணமியில் கடற்கரைக்குச் சென்று உரக்கப் பாடுவார்கள்.. இப்படி மற்றொரு அசாதாரண சக்தி ஒருவனை ஆட்கொண்டால் அவனைப் பேயன் என்று சொல்லலாம். இப்போதுகூட இந்த வார்த்தை 'ஃபார்முக்கு வந்துட்டா சேவாக் பேயா அடிப்பான்' போன்ற பிரயோகங்களில் அன்றாடம் வருகிறது. குலசேகர ஆழ்வார் தன் பெருமாள் திருமொழியில் பேயர்களைப் பற்றிப் பேசுகிறார்.

*பேயரே எனக்கு யாவரும் யானும்ஓர்*
*பேயனே எவர்க்கும் இது பேசிஎன்*
*ஆயனே! அரங்கா! என்றழைக் கின்றேன்.*
*பேயனாய் ஒழிந்தேன் எம்பிரா னுக்கே.*

உலகப் பற்று உடையவர்கள் எல்லாம் எனக்கு பேயர் போலத் தோன்றுகிறார்கள். நானும் அவர்களுக்கு ஒரு பேயன் போலத் தோன்றுவேன். இதைப் பற்றிப் பேசிப் பயனில்லை. 'ரங்கா' என்று அழைக்கிறேன் . என் பெருமாளுக்கு நான் பித்தனாகிவிட்டேன்.

மிகுந்த பக்தியும் ஒரு பித்துப் பிடித்த நிலைதான். Trance என்று சொல்வார்கள். ஒரு கட்டத்தில் தன்னையும் தன் சூழ்நிலையையும் மறக்கச் செய்யும்.

நம் வாழ்வில் எப்போதாவது இந்த நிலை ஏற்படலாம். ஒரு கணம் நம்மைச் சுற்றியுள்ளவை அனைத்தையும் மறந்துபோய் பகவானுடன் ஐக்கியமடையச் செய்யும். ஒரு கணம்தான். மறுகணம் பையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டு பஸ் பிடிக்க ஓடுவோம்.

# 46. எதுவும் வேண்டாம்

'இந்திரலோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானே' என்ற தொண்டரடிப் பொடியாழ்வாரின் 'பச்சைமாமலை போல் மேனி' என்று துவங்கும் பாடல் பிரசித்த மானது. இந்திர பதவி கிடைத்தாலும் வேண்டாம். திருமாலைத் தொழுதால் போதும் என்ற கருத்து பிற ஆழ்வார் பாடல்களிலும் அவ்வப்போது வெளிப்படுகின்றது. உதாரணமாக பூதத்தாழ்வார் இரண்டாம் திருவந்தாதியில் பாடியிருக்கும் இந்த வெண்பா.

*மண் உலகம் ஆளேனே; வானவர்க்கும் வானவனாய்,*
*விண்ணுலகம் தன் அகத்து மேவேனே--நண்ணித்*
*திருமாலை செங்கண் நெடியானை, எங்கள்*
*பெருமானை, கை தொழுத பின்.*

(மேவேனே - நெருங்க மாட்டேன், நண்ணி - கிட்டி)

இந்த பூமி முழுவதையும் ஆளக் கொடுத்தாலும் ஆளமாட்டேன். தேவர்களுக்கு தேவனாய் சொர்க்கத்திற்கு செல்லும் சந்தர்ப்பம் கிடைத்தாலும் போகமாட்டேன். எங்கள் பெருமாளை வணங்கிய பின் இவையெல்லாம் எனக்குத் தேவையில்லை.

பூதத்தாழ்வார் என்ற பெயர் எப்படி ஏற்பட்டது?. முதலாழ் வார்கள் பொய்கையார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் மூவரும் அடைமொழியால் குறிக்கப்பட்டுள்ளனர். பூதம் என்றால் உயிர் என்று ஓர் அர்த்தம் உண்டு. பூத உடல் என்ற பதப்பிரயோகம் கேள்விப்பட்டிருப்பீர்கள். தன் உயிர் திருமாலுக்கே என்று சொன்னதால் இவருக்கு பூதத்தாழ்வார் என்ற பெயர் ஏற்பட்டது என்று ஒரு கதை சொல்வார்கள். அந்தக் கூற்றை நிரூபிக்கும் வகையில் உள்ளது இந்தப் பாசுரம். சிவந்த கண்கள் கொண்ட உயரமான திருமாலை நெருங்கித் தொழுதபின் வேறு எது கிடைத் தாலும் வேண்டாம் என்கிறார். இன்று நம்மில் பெரும்பாலானோர் இறைவனைத் தொழுவதே மண்ணுலகம் ஆள்வதற்கும் பெரிய பதவிகள் கிடைப்பதற்கும்தான். பூதத்தாழ்வார் போன்ற அப்பாவித் துறவிகள்தாம் இதெல்லாம் வேண்டாம் தரிசனம் மட்டும் போதும் என்பார்கள்.

# 47. கழகண்டு செய்யும் பிரான்

பெரியாழ்வார் பாசுரங்களில் உள்ள அருகாமை, அன்யோன்யம் மற்ற ஆழ்வார்களைவிட அதிகம். திருமாலை கண்ணன் ரூபத்தில் குழந்தையாகப் பார்த்து தன்னைத் தாயாக்கிக் கொண்டு அக்குழந்தையை பல விதங்களில் கொஞ்சும் பாடல்களில் தமிழ் கொஞ்சும். இந்தப் பாட்டில் கண்ணன் செய்யும் விஷமங்களை விவரிக்கிறார்.

*எண்ணெய்க் குடத்தை உருட்டி*<br>
*இளம் பிள்ளை கிள்ளி எழுப்பி*<br>
*கண்ணைப் புரட்டி விழித்துக்*<br>
*கழகண்டு செய்யும் பிரானே!*<br>
*உண்ணக் கனிகள் தருவன்*<br>
*ஒலிகடல் ஓதநீர் போலே*<br>
*வண்ணம் அழகிய நம்பீ!*<br>
*மஞ்சனம் ஆட நீ வாராய்.*

(கழகண்டு என்றால் விஷமம், தீம்பு. ஓதம் என்றால் அலை.)

எண்ணெய்க் குடத்தை உருட்டி, தூங்கும் குழந்தைகளைக் கிள்ளி எழுப்பி கண்ணை ஒருமாதிரி புரட்டி விழித்து பயமுறுத்தி விஷமங்கள் செய்யும் பிரானே! உனக்கு பழங்கள் தருவேன். கடல் நிறத்தவனே! உன்னைக் குளிப்பாட்ட வேண்டும். வரமாட்டாயா?

கண்ணனை நீராட அழைக்கும் இப்பாடல்கள் பெரியாழ்வாரின் பிள்ளைத் தமிழின் ஒரு பகுதியாகும். பிள்ளைத் தமிழுக்கு இலக்கணமாக அமைந்தவை. இன்று உலகில் நிகழும் பல விஷயங்கள் பகவானின் 'கழகண்டு' போலத்தான் தோன்றுகிறது.

# 48. கீதை படியுங்கள்

**து**வாரகையில் இடையர் குலத்தில் பிறந்த மாயக்காரன் கண்ணன். அவன் நமக்கு வெகுதூரத்தில் இருப்பவனா எனில் ஆம். கிட்டத்தில் இருப்பவனா ஆம். மிகப் பெரியவனா, ஆம். சிறுவனா ஆம்! அவன் அன்று யுத்தத்தின் நடுவில் ஓதிய கீதையை கற்காதவர்கள் உலகத்தில் ஞானமற்ற அந்நியர்கள்.

நான்முகன் திருவந்தாதியில் திருமழிசை ஆழ்வாரின் இந்த வெண்பாவில் மூன்று அழகிய தமிழ் வார்த்தைகளை தெரிந்து கொள்ளலாம். சேயன் - என்றால் தூரத்தில் இருப்பவன், அணியன் - கிட்டத்தில் இருப்பவன், ஏதிலர் - என்றால் அந்நியர்கள்.

'ஏதிலார் குற்றம்போல் தம் குற்றம் காண்கிற்பின்' என்று வள்ளுவர் சொல்லும் 'மற்றவர்கள்'. இம்மூன்று சொற்களில் அணியன் என்ற சொல் தற்போது வழக்கில் மலையாளத்திலும் இருக்கிறது, கையாள் என்கிற அர்த்தத்தில்.

பகவான் நம் கையாளாக இருந்தால் எதைப் பற்றியும் கவலைப்படவேண்டியதில்லை.

இப்போது பாடலைப் பார்ப்போம்.

*சேயன், அணியன், சிறியன், மிகப்பெரியன்,*
*ஆயன், துவரைக்கோனாய் நின்ற மாயன் -- அன்று*
*ஓதிய வாக்[கு] அதனைக் கல்லார், உலகத்தில்*
*ஏதிலர் ஆம், மெய்ஞ் ஞானம் இல்.*

*(துவரை என்று துவாரகையை தமிழ்ப்படுத்தியிருக்கிறார் ஆழ்வார் . அவர் வாக்கு என்று சொல்லுவது பகவத்கீதையை. அதை கற்காதவர்கள் உலகத்தில் எதற்கும் தகுதியில்லாதவர்கள்)*

## 49. கடவுளுக்கு உருவம் உண்டா?

கடவுளைப் பார்க்க முடியுமா? எப்போது நம் கண்கள் அவரைக் காணும்? இன்று நம்மால் அவரைப் பார்க்க முடியவில்லையே? என்று அவர் நமக்குத் தெரிவார்? இந்தக் கேள்வியை நம்மாழ் வாரிடம் கேட்டால் அவர் எப்படி விடையளிப்பார்? இப்படி:-

***அன்றே, நம் கண் காணும் ஆழியான் கார் உருவம்,***
***இன்றே, நாம் காணாது இருப்பதுவும் -- என்றேனும்,***
***கட்கண்ணால் காணாத அவ் வுருவை, நெஞ்சு என்னும்***
***உட்கண்ணால் காணும் உணர்ந்து.***

கட்கண் என்றால் புறக்கண்.

சக்கரக் கையனின் மேகக் கறுப்பான உருவத்தை அன்றைக்கு நம் கண் பார்க்கும். என்றைக்கு? இன்று நம்மால் பார்க்க முடியாமல் இருப்பதும், என்றும் புறக்கண்ணால் பார்க்க முடியாத அந்த உருவத்தை உணர்வுபூர்வமாக உனக்கு உள்ளே இருக்கும் அகக்கண்ணால் பார்க்க முடியும்.

ஆலயத்துக்குச் சென்று பகவானை வழிபடும்போது சற்றுநேரம் கண்ணை மூடிக் கொள்கிறோமே அது இதற்குத்தான் என்று தோன்றுகிறது. புறக்கண்ணால் விக்கிரகமாகவோ சிலையாகவோ பார்த்த வடிவமல்ல அந்த வடிவம். உணர்வுபூர்வமாக உள்ளத்துள் தெரியும் ஓர் உருவம். 'உள்ளத்தில் உள்ளான் என்று ஓர்' (நினைத்துக் கொள்) என்று மற்றொரு பாசுரத்தில் சொல்லியிருக் கிறார்.

அதுதான் அவன் உண்மையான உருவம். இவ்வாறு உள்ளத்தில் உணர முடிகிறவர்களுக்கு நாளடைவில் உருவ வழிபாடு தேவை யற்றுப்போகும். பாட்டை மறுபடி பாருங்கள்.

# 50. என்ன செய்யப் போகிறாய்?

அழகான பெண்களைப் பெற்ற தாய்மார்களின் இன்றைய கவலைகள் என்ன என்ன? அவர்களில் பக்தியுள்ள தாய்மார்கள் பகவானிடத்தில் எப்படி வேண்டிக் கொள்வார்கள்? இவளுக்கு என்னதான் வைத்திருக்கிறாய், நல்ல புத்தியைக் கொடு. இப்படி யெல்லாம் மனதில் வேண்டிக்கொள்வது சகஜமே. தாய்மார்களின் கவலைகள் நூற்றாண்டுகள் கடந்தாலும் மாறாது என்பதற்கு உதாரணங்கள் பல பிரபந்தத்தில் உள்ளன.

சென்னையிலிருந்து மாமல்லபுரம் செல்லும் சாலையில் கோவளம் அருகில் எட்டாம் நூற்றாண்டுக் கோயில் உள்ளது. அதன் பெயர் திருவிடவெந்தை. சுருக்கமாக இன்று திருவிடந்தை என்று சொல்கிறார்கள். மார்பில் லட்சுமிக்கு இடம் தந்த தந்தை போன்ற திருமாலின் உறைவிடம் என்று பொருள். அதில் லட்சுமி வராகப் பெருமாளும் அகிலவல்லி நாச்சியாரும் எழுந்தருளி யுள்ளனர்.

திருமங்கையாழ்வார் இந்தக் கோயிலுக்கு வந்திருக்கிறார். பெரிய திருமொழி இரண்டாம் பத்து ஏழாம் திருமொழியில் பத்து அற்புதமான பாடல்கள் திருவிடவெந்தையைப் பற்றிப் பாடியிருக் கிறார். என் மகளுக்கு என்னதான் நீ தீர்மானித்திருக்கிறாய் என்று பகவானைப் பார்த்து ஒரு தாய் கேட்பதாகப் பாடல்கள் அமைந் துள்ளன. ஓர் உதாரணம் பாருங்கள்.

*திவளும் வெண் மதிபோல் திரு முகத்து அரிவை*
*செழும் கடல் அமுதினில் பிறந்த*
*அவளும் நின் ஆகத்து இருப்பதும் அறிந்தும்,*
*ஆகிலும் ஆசை விடாளால்;*
*குவளை அம் கண்ணி, கொல்லி அம் பாவை --*
*சொல்லு; நின் தாள் நயந்திருந்த*

*இவளை, உன் மனத்தால் என் நினைந்து இருந்தாய்?*
*இடவெந்தை எந்தை பிரானே!*

(அரிவை - பெண், ஆகம் - உடம்பு, நயந்து - விரும்பி)

சந்திரன்போல முகத்தை உடைய இந்தப் பெண் அமுதத்தில் பிறந்த மகாலட்சுமி உன் உடம்பில் இருப்பதை அறிந்தும் உன்மேல் ஆசையை விடவில்லை. குவளை மலர்க் கண்ணும் கொல்லிப் பாவைபோல உடலமைப்புமாக நிற்கிறாள். சொல்லு! உன்னை விரும்பும் இவளை என்ன செய்யப்போகிறாய் திருவிடவெந்தைப் பிரானே!

என்ன செய்வது ஓர் என்.ஆர்.ஐ. மாப்பிள்ளை பார்த்து அமெரிக்காவுக்கு அனுப்பிவிடட்டுமா என்று அவர் கேட்கலாம்!



# 51. திருமாலின் அகைப்பு

அகைப்பு என்ற ஒரு சொல்லை இந்த வாரம் கவனிப்போம். தமிழில் நாம் இழந்த பல நூறு அழகான சொற்களில் இதுவும் ஒன்று. அகைப்பு என்றால் செயல், சிருஷ்டி; பிரயத்தனம்.

திருமாலின் சிருஷ்டி அல்லது பிரயத்தனத்தால் ஏற்படுகிறவை எவை?

திருமழிசை ஆழ்வார் 'நான்முகன் திருவந்தாதியில் ஒரு முழுப் பட்டியலே தருகிறார் - வானம், பரவும் தீ, காற்று, பெரிய கடல், உயர்ந்த மலை, வெப்பமான சூரியன், குளிர்ந்த சந்திரன், உயரத்தில் ஓடும் மேகங்கள், சுற்றிலுமுள்ள எட்டுத் திசைகள், இவற்றுடன் அண்டமும் திருமாலின் சிருஷ்டி என்கிறார் எதையும் விட்டுவைக்காமல்.

> *வான், உலவு தீ வளி, மா கடல், மா பொருப்பு,*
> *தான் உலவு வெம் கதிரும் தண் மதியும், -- மேல் நிலவு*
> *கொண்டல் பெயரும், திசை எட்டும், சூழ்ச்சியும்,*
> *அண்டம் திருமால் அகைப்பு.*

(வளி-காற்று, பொருப்பு-மலை, கொண்டல்-மேகம், பெயரும் -அசையும், சூழ்ச்சி-சுற்று, அகைப்பு-செயல், சிருஷ்டி)

இந்த ஒரு சிறிய வெண்பாவில் நம் தமிழில் வழக்கொழிந்து விட்ட சொற்களான வளி, பொருப்பு, கொண்டல், அகைப்பு போன்றவற்றை எண்ணி ஒரு சொட்டுக் கண்ணீர் விடுவோம். 'சூழ்ச்சி' அர்த்தம் மாறிப் பிழைத்துக் கொண்டுவிட்டது.

## 52. பரவச நிலை

**பி**ரபந்தத்தின் மிகச் சிறந்த பாசுரம் எது என்று என்னை பலர் கேட்பார்கள். ஒவ்வோர் ஆழ்வாருக்கும் ஒரு சிறப்பு உண்டு. பெரியாழ்வார் பிள்ளைத்தமிழ் செய்தார்; ஆண்டாள் காதலித்தார்; தொண்டரடிப் பொடி பக்தியில் உருகிப்போனார்; குலசேகரர் இராமரை சிலாகித்தார்; திருப்பாணாழ்வார் 'அமலன் ஆதி பிரானை'க் கண்ட கண்கள் மற்றொன்றைக் காணாது என்றார்; திருமழிசை துடிப்பான சந்தத்தில் தத்துவங்கள் சொன்னார். முதல் மூன்று ஆழ்வார்களும் அன்பையும் வையத்தையும் திரியாக வைத்து விளக்கேற்றி பகவானின் பொன்மேனியைக் கண்டனர். திருமங்கை ஆழ்வார் தமிழ்ப் புலமையால் பிரமிக்க வைத்தார். இப்படி ஒவ்வொருவரும் தமக்கே உரிய தனிச்சிறப்புகள் கொண் டிருந்தாலும் நம்மாழ்வாரின் திருவாய்மொழியை இதற்கெல்லாம் மகுடம் போல, சிகரம் போலச் சொல்லலாம். திருவாய்மொழி யிலேயே மிகச் சிறந்த பாசுரத்தை நம்மாழ்வார் அதன் கடைசியில் வைத்திருக்கிறார்.

***சூழ்ந்து, அகன்று, ஆழ்ந்து, உயர்ந்த முடிவில் பெரும் பாழேயோ!***
***சூழ்ந்து, அதனில் பெரிய பர நல் மலர்ச் சோதீயோ***
***சூழ்ந்து, அதனில் பெரிய சுடர் ஞான இன்பமேயோ!***
***சூழ்ந்து, அதனில் பெரிய என் அவா அறச் சூழ்ந்தாயே!***

முடிவிலாத இறைவனை வார்த்தைகளில் நமக்கெல்லாம் விவரிக்க பற்பல ஜாலங்கள் செய்கிறார் ஆழ்வார். சுற்றிலும் பரவி அகலம், ஆழம், உயரம், முடிவற்ற தன்மை கொண்ட பெரும் பாழோ! நீ அதைவிடப் பெரிய ஜோதியா? அதனினும் பெரிய சுடர் ஞான இன்பமா? அதைவிடவும் பெரிசான என் ஆசையெல்லாம் தணியும்படி என்னை ஆக்ரமித்துக் கொண்டாயே!

பரவச நிலை என்பதை இதை மிஞ்சும்படி யாரால் சொல்ல முடியும்?

# அருஞ்சொற்பொருள்

அருக்கன் - சூரியன்
அந்தகாலம் - கடைசிக்காலம்
அரவதண்டம் - நரகத்தில் தண்டனை
அன்னே - துக்கக் குறிப்பு
அருங்கலம் - அருமையான ஆபரணங்கள்
அரை - இடுப்பு
அணைந்தான் - அடைந்தான்
அட்டவன் - வென்றவன்
அல்லா - பயனல்லாத
அரிவை - பெண்
அகைப்பு - செயல், சிருஷ்டி
ஆழி - சக்கரம், கடல்
ஆர்வினாவிலும் - யார் கேட்டாலும்
ஆனாத - அழியாத
ஆழியான் - சக்கரத்தைக் கையில் வைத்திருப்பவன் அல்லது கடலில் துயில்பவன்- திருமால்
ஆழி - சக்கரம்
ஆளா - அடிமை செய்வதற்கு
ஆகம் - உடம்பு
இடராழி - துன்பக்கடல்
இமையாதிருப்பரே - இடைவிடாமல் தியானம் செய்தால்
இரங்கும் - உருகும்
இந்திரகோபம் - பட்டுப்பூச்சி
இரந்தார்க்கு - பிச்சை கேட்டவர்களுக்கு
ஈண்டி - திரண்டு
ஈட்டம் - கூட்டம்
உய்யல் - பிழைத்துப்போதல், தப்பித்தல்
உகந்தது - விரும்பியது
உய்துகொலோ - தப்பிக்கவும் முடியாமல்
எள்கி - குறைந்து
ஏத்துதிரேல் - வாழ்த்தினால்
ஒழிந்தில-இன்னும் மலரவில்லை
ஓதம் - அலை.
கலந்தார் - கூடினவர்
கடல் ஞாலம் - கடல் சூழ்ந்த உலகம்
கற்கின்றவே - சொல்வதெல்லாம்
கலை - ஆடை
கறவை - பசு
கரிது - கறுப்பானது
கருளக்கொடி உடையார் - கருடனைக் கொடியாகக் கொண்ட திருமால்
கவ்வை - ஆரவாரம்
கழகண்டு - விஷமம், தீம்பு
கட்கண் - புறக்கண்.
கார்த்தன - அரும்பின
கால் - காற்று
கார்த்தண் - மேகம் போல குளிர்ந்த
கீண்டேன் - பிளந்தேன்
குழல் - கூந்தல்
குறை - சிறியது
குப்பாயம் - சட்டை
கூம்பும் - குவியம்
கேள்வன் - கணவன்
கொண்டல் - மேகம்
சிறுபேர் - செல்லப்பெயர்
சீறல் - கோபிக்காதே
சுடராழி - ஒளிச் சக்கரம்
சுழலை - விரித்த வலை
சூழ்ச்சி - சுற்று

செய்ய - சிவந்த
செருக்கிளரும் - போரில் கலக்கும்
செய்து - சிவப்பானது
செல்லுந்தனையும் - இறக்கும்வரை
சொல்லும் தனையும் - சொல்ல முடிந்தவரை
சோர்வு - மறதி
தகளி - மண்விளக்கு
தரங்கம் - அலை
தடா - தவலை
தாது - உள்ளிதழ், மொட்டு
தாமம் - மாலை
திரிபவும் - மாறுவதும்
துன்னி - நெருங்கி
துவரை - துவாரகையை
தேருங்கால் - ஆராயும்போது
தோய்விலன் - அவரவர் மதங்களால் பாதிப்பு இல்லாதவன்
நன்புகழ்சேர் - குறையற்ற புகழ் கொண்ட
நன்புல - நல்லவழி
நண்ணி - கிட்டி
நயந்து - விரும்பி
நாரணன் - நாராயணன், விஷ்ணு
நாற்றி - தொங்க விட்டு
நாமங்கை - சரஸ்வதி
நிலாய - நிலவிய
நீர்மை - குணம், தன்மை
பந்தர் - பந்தல்
பராவி நிரப்பி
பசிது - பச்சை
பவ்வம் - கடல்
பவனம் - காற்று
பீலி - இறகு
பீதகஆடை- பீதாம்பரம்
புனல் - நீர்
புகர்மால் யானை - புள்ளிகளுடைய யானை
புன்புல - அற்பமான இன்பங்களின் வழி
புணை - தெப்பம்
புல்கும் - அணைத்துக் கொள்ளும்
பூ - பூமி
பூமங்கை - லக்ஷ்மி
பெயரும் - அசையும்
பேணுங்கால் - விரும்பும்போது
பொன்வாசிகை - பொன்னாலான வட்டமாலை
பொலிவு - உருவம், அழகு
பொருப்பு - மலை
மயல் - மயக்கம் பித்து
மந்தரம் - பாற்கடலைக் கடைந்த மந்தர மலை
மார்வம் - நெஞ்சம்
மாயத்தால் - விளையாட்டாக
மாதிரம் - திசை
மீ - ஆகாயம்
மேவும் - வசிக்கும்
மேவேனே - நெருங்க மாட்டேன்
மொய்த்தெழுந்த - திரண்டு வந்த
வளி - காற்று
வன்தாள் சிமயம் - வலிமையான அடிவாரமுள்ள சிகரம்
வாக்கு - பகவத்கீதையை
விடை அடர்த்த - எருதுகளைக் கொன்ற
வெய்ய - வெப்பமிக்க
வெளிது - வெள்ளை
வேள்வி - யாகம்
வைகுந்தமன்னாய் - வைகுண்டத்தைப் போன்றவளே



Design: naanaas@gmail.com

**வையம் தகளியா வார்கடலே நெய்யாக**
**வெய்ய கதிரோன் விளக்காக- செய்ய**
**சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொல்மாலை**
**இடராழி நீங்குகவே என்று.**

(வெய்ய- வெப்பமிக்க, செய்ய-சிவந்த, சுடராழி- ஒளிச்சக்கரம்,
இடராழி- துன்பக்கடல்)

இதைப் பாடிய பொய்கையாழ்வார் ஆறாம் நூற்றாண்டைச்
சேர்ந்தவர். திருவெஃகா என்ற பழைய பெயர்கொண்ட
காஞ்சிபுரத்துக்காரர்- துறவி.

இந்தப் பாடல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் 2082 ஆம் பாசுரம்.
இயற்பா என்கிற பகுதியில் முதல் திருவந்தாதியில் முதல் பாசுரம்.

இது நேரிசை வெண்பாவில் அமைந்தது. பொய்கையாழ்வார்
பாடிய நூறு பாடல்களால் புறவிருள் அகன்றது என்பது
வைணவர்கள் நம்பிக்கை. அதிகாலையில் கடற்கரையில்
இருள் பிரியும் வேளையில் நின்றுகொண்டு தொடுவானத்தில்
சூரியன் உதிக்க எழுந்து உலகெலாம் வெளிச்சத்தில்
நனைவதைப் பார்க்கும்போது
'சஹஸ்ரகோடி பாஸ்கர துல்யம்' என்று சொல்லும்
'கதிராயிரம் இரவிகலந்தாற்' போன்ற அந்தக் கணத்தில்
பொய்கையாழ்வாரை நினவில் கொள்ளுங்கள்.

- சுஜாதா